ஸ்ரீ இராஜராஜேசுவரி சகாயம்






# கம்பனூர் தல விளக்கம்

வெளியீடு;
**சிவகங்கை அரண்மனை அறநிறுவனத்தார்**
சிவகங்கை

பரம்பரை அறங்காவலர்
**திருமிகு. கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா அவர்கள்**
(சிவகங்கை ராஜா)

தேவஸ்தான மேலாளர் & பவர் ஏஜண்ட்
**திரு. இரா. சுப்பிரமணிய அய்யர் பி.ஏ, பி.எல்.**
**1972.**

முதற் பதிப்பு: செப்டம்பர், 1972
பதிப்புரிமை : அரண்மனை அறநிறுவனத்தாருக்கே



பதிப்பாசிரியர்:
திரு. புலவர். இரா. வில்லாளன்.
தமிழாசிரியர்,
மன்னர் உயர்நிலைப்பள்ளி,
சிவகங்கை.

அச்சிட்டோர்:
முத்தமிழ் அச்சகம்,
சிவகங்கை-72.

31-1

# காணிக்கை

வல்லாராய் நல்லாராய் வையம் போற்ற
மதிக்குடைக்கீழ் சிவகங்கை ஆளு கின்ருர்

சொல்லாலும் செயலாலும் புகழைச் சேர்த்தார்
தொண்டுக்குப் பொழுதெல்லாம் செலவு செய்தார்

எல்லார்க்கும் இனியவராய் ஆல்போல் நிற்கும்
எம்கார்த்தி கேயமன்னர் இணைய டிக்குச்

சொல்லார்க்கும் கம்பனூர்த் தலவி ளக்கத்
துதிநூலைக் காணிக்கை ஆக்கி னேன்காண்!

—வில்லாளன்





சிவகங்கை மன்னர்

**திருமிகு .து. ச. கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா**
**அவர்கள்**

314

# மேன்மை தங்கிய சிவகங்கை மன்னர் அவர்களின் அணிந்துரை.



இயற்கை யோடிசைந்த இன்டம் பெறவும், இன்பத்தோடு இசைந்த வாழ்வு நடத்தவும் வாய்ப்பானவை ஆலயங்கள். பொறிவாயில் ஐந்தவிக்கவும், நம்மனத்தை நல்ல நெறிவாயிலில் நிலைநிறுத்தவும் துணையாவன ஆலயங்கள். வீட்டுநெறிக்கு வித்தாக நம் நாட்டில் விளங்குவன ஆலயங்கள். இன்னபிற தகுதிக்குரியதாகவும் எங்கள் மூதாதையர் கௌரிவல்லப மன்னர்களால் எழுப்பப்பட்ட பெருமைக்குரியதாகவும், உள்ள ஆலயம் கம்பனூர் ஆலயம்.

கம்பனூர் ஆலயம் பற்றிய ''கம்பனூர்த் தலவிளக்கம் என்னும் **புலவர்: இரா. வில்லாவனின்** நூலினை அண்மையில் படித்துப்பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. இந்நூலாசிரியரின் முன்னோர்கள் கம்பனூர்க் கோயிலின் **தானக்கணக்கு** உரிமையுடையவர்கள் அவர்களின்வழிவந்த புலவர் **வில்லாவன்** அவர்களால் 'கம்பனூர்த் தலவிளக்கம் எழுதப்பட்ட பொருத்தத்தை எண்ணி இந்நூலைப்படிக்கப்புகுந்தேன்.

ஆசிரியரால் சுவைபடச்சுட்டப்பட்டுள்ள கம்பனூர்த்தல வரலாறும், ஊரைப்பற்றி கோயிலைப்பற்றி வாய்மொழியாக வழங்கும் புனைகதைகளும் என்னைப் பெரிதும் கவர்ந்தன.

நிகழ்ச்சிகளைக் கோவைப்படுத்திச்சொல்வதும் அதற்கேற்ப வண்ணத்தமிழை வணக்கி ஆள்வதும் இவரிடம் நான் கண்டு மகிழும் எழுத்தியல்புகள். இறையருளில் ஈடுபட்டுத் தன்னையிழந்து தலைவன் வசப்பட்ட அடியார்கள் அனைவரும் தம் எழுத்தாற்றலாலேயே பக்தி என்னும் ஈரத்துறைக்கு மற்றவர்களை இழுத்திருக்கிறார்கள். இந்தப்புத்தகத்தின் ஒவ்வொரு பக்கமும் நம்மை, ஆசிரியர் பக்கம் இழுக்கிறது.

கம்பன் காவியம் படிக்கத்தகுந்தது. கம்பனூர் ஆலயம் ஒவ்வொருவரும் போய்க் காணத்தகுந்தது. கம்பனூர்த்தலவிளக்கம் என்னும் இந்நூலும் படிப்பதற்குரியது. பாராட்டுதற்குரியது. ஏனெனில்கண்ணுக்கு முன்னால்நின்றுகளிப்பாக்கும்கல்லோவியங்களைக்காட்டிலும், உள்ளத்தைத் தொட்டு உயிரூஞ்சல் ஆட்டுகின்ற சொல்லோவியங்கள்மேலானவை அல்லவா? புலவர்க்கு நம் வாழ்த்துக்கள். வாழ்க! வளர்க!

10—9—1972 — சிவகங்கை.

து. ச. கார்த்திகேய ராஜா
(சிவகங்கை மன்னர்)

மு. கண்ணப்பன்
அறநிலைய அமைச்சர்

தமிழ் நாடு அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-9.
25—7—1972

பேரன்புடையீர்,

முகவை மாவட்டம் கம்பனூர் திரு கோட்டை விநாயகர் மீனாட்சிசுந்தரேஸ்சுவரர் திருக்கோயில் திருக்குடமுழுக்கு விழா செப்டம்பர் திங்கள் 14ம் நாள் நடைபெற இருப்பதை அறிந்து மெத்தவும் மகிழ்ச்சியடைகிறேன். குடமுழுக்கு விழா சிறப்புற நிகழ என் வாழ்த்துக்களை உரித்தாக்கிக் கொள்வதோடு திருக் கோயில் திருப்பணிக்கு உறுதுணையாக இருந்து எல்லா வகை யிலும் உதவிகள் புரிந்த அனைவருக்கும் என் இதயம் கனிந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள,
ஓம் (மு, கண்ணப்பன்.)

என். வி. நடராசன்
தொழிலாளர் நலத்துறை
அமைச்சர்

தலைமைச்செயலகம்
சென்னை-9
24—8—1972

அன்புடையீர்,

வணக்கம். மதமான பேய் பிடியாதிருக்க வேண்டும் என்ற அறிவுரை எல்லா சாதி மத சமயத்தினருக்கும் பொதுவானதாகும். மதமோ அல்லது கடவுளோ மக்களுக்கு நல்வாழ்வையும் நற்புணர்ணையும் அளிப்பதாயிருக்கவேண்டும். மாறாக மதத்திற்காக மக்கள் மாய்வது அல்லது மக்களின் வாழ்வை சீர்குலையச் செய்வது என்றால் அக்கட்டத்தில் பகுத்தறிவாளர்கள் குறை கூறும் போது ஆத்திகர்கள் என்று தங்களைக் கூறிக் கொள்பவர்கள் கோபப்படுவதில் அர்த்தமிருக்க முடியாது.

காலத்தின் மாறுதலை பழைமையில் மட்டுமே நம்பிக்கை கொண்டவர்கள் உணர்ந்து பார்க்காமல் வீண்பெருமைகளைப் பேசுவதால் அவர்களெல்லாம் எதிர்காலச் சந்ததிக்கு கேடுவிளை வித்தார்கள் என்ற பலமான குற்றச்சாட்டுக்கு ஆளாவார்கள் என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

காந்தியடிகள் மதவெறியன் ஒருவனால் சுட்டுக்கொல்லப் பட்டபிறகு கூட மதவாதிகள் என்பவர்கள் தங்கள் கடமைகளை ஆராய்ந்து பார்த்து திருத்திக்கொள்ளாமல் பகுத்தறி வாளர்கள் மீது பாய்வது நியாயமாகாது. எனவே ஆலயத் திருப்பணிக் குழுவினர் அறிவைப்பரப்பும் பணியினையும்சேர்த்துச் செய்வது நாட்டுக்கும் சமுதாயத்திற்கும் அழிக்க முடியாத நன்மைகளைச் செய்வதாகும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

அன்புள்ள

என். வி. நடராசன்.

தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக
ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம், மாயூரம் P. O
26—8—1972

''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளாகிய இறைவன் தம்மை வழிபடும் அன்பர்களுக்கு அருள்வழங்க எழுந்தருளி யிருக்கும் இடங்கள் ஆலயங்களாகும், இவ்வாலயங்களின் சிறப்பைத் தேவர்கள், முனிவர்கள் முதலானோர்நிலவுலகம் வந்து திருக்கோயில்களில் வழிபாடியற்றி அருள் நலம் பெற்றதாகக் கூறும் தலபுராணங்களால் நாம் அறியலாம். எளிவந்த கருணை யாளனுய் இறைவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில்களைப் போற்றிப் புரத்தல் மக்களின் தலையாய கடமையாகும்.

'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா, என்பது பெரியோர் அறிவுரை. திருக்கோயில் இல்லாத ஊர்களைத் திரு வில் ஊர் என்று கூறுகிறுர் அப்பரடிகள்.முடியுடை வேந்தர்களும் பிறரும் தமிழகத்தைத் திருக்கோயில்களால் அலங்கரித்தனர். தென்னுட்டைத் தெய்வ பூமியாகத் திகழச் செய்துள்ளனர் 'முன் னவனுர் கோயில் பூசைகள் முட்டிடில் மன்னவர்க்குத் தீங்குள வாரி விளங்குன்றும்' என்ற திருமந்திரத்தைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தனர்.

திருக்கோயில்களைச் செம்மையாகப் பரிபாலித்தால்தான் நாடு செழிப்புறும். ஆலயங்கள் இறைவன் திருமேனியைப் போன்றவை. அவற்றைப் பழுதுபடா வண்ணம் காப்பது சிறந்த சிவபுண்ணியப் பணியாகும்.

கம்பனூர் ஸ்ரீ கோட்டை விநாயகர் ஸ்ரீ மீனுட்சி சுந்தரே சுரர் திருக்கோயிலை சிவகங்கை திரு. து. ச. கார்த்திகேய வேங் கடாசலபதி இராஜா அவர்களும், நாச்சியாபுரம் திரு. சண்முகம் செட்டியார் அவர்களும், கம்பனூர்க் கிராமத்து மக்களும் சிறந்த முறையில் திருப்பணிகள் செய்வித்து மகாகும்பாபிஷேகம் செய் விப்பது, கும்பாபிஷேகத்தை யொட்டி தெய்வ மணம் கமழும் விழாமலர் வெளியிடுவதும் பாராட்டற்குரியன.

மகா கும்பாபிஷேக விழா சிறந்த முறையில் நிகழவும், விழா மலர் நன்கு மலர்ந்து மணம் பரப்பவும், திருப்பணிகளில் ஈடுபடும் அன்பர்கள் நலம் பல பெற்று நீடுவாழவும் நமது ஆண் ணார்த்த மூர்த்தியாகிய செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந் திக்கின்றோம்.

கே. எஸ். நரசிம்மன்,
பி. ஏ. பி. எல். ஐ. ஏ. எஸ்,
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய (ஆட்சி)த்துறை.

சென்னை—34
26—7—1972

# அணிந்துரை

காரைக்குடி நகருக்கு அண்மையிலுள்ள கம்பனூர்க் கோயில், பழமையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த தொன்றாகும் நாச்சியாபுரம் **திரு. வயி சண்முகம் செட்டியார்** அவர்களும் ஊர்மக்களும் பெரு முயற்சி எடுத்து, இக் கோயில் திருப்பணியைச் செவ்விதிற் செய்து நிறைவேற்றி இருக்கின்றார்கள். அதன் பயனாக 14—9—72 அன்று குடமுழுக்குவிழா மிகச்சிறப்புடன் நிகழவிருக்கின்றது.

குடமுழுக்கு விழாவினையொட்டி, 'கம்பனூர் தலவிளக்கம் என்னும் நூல், சிவகங்கை அரசர் உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் **புலவர் இரா. வில்லாளன்** அவர்களால் சிறப்புற ஆராய்ந்து எழுதப்பெற்றுள்ளது. ஆசிரியரின் சிறந்த புலமையும் ஆராய்ச்சியும் பெரிதும் புகழ்ந்து போற்றுத் தக்கனவாக விளங்குகின்றன. நூல், நல்ல இனிய தெளிவான சிறந்த நிலையில் அமைந்திருககின்றது, சிறப்புமிக்க பலவரலாற்றுச் செய்திகள் இதன்கண் நன்கினிது விளக்கப் பெற்றிருக்கின்றன.

இந்தச் சிறந்த நூலைச் சிவகங்கை மன்னர் மாட்சிமிகு **திரு. து. ச. கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா** அவர்கள், குடமுழுக்குவிழாவினை யொட்டி வெளியிடுவது, இந்நூலின் சிறப்பை மிகுதிப்படுத்தி அணிசெய்கின்றது.

இந்த நல்ல பயன்மிக்க நூலைப் பதிப்பித்துதவிய சிவகங்கை மன்னருக்கும், தேவஸ்தானத்துக்கும், இதனை மிகவும் நல்ல முறையில் எழுதியளித்த **புலவர் திரு. இரா. வில்லாளன்** அவர்களுக்கும், என்னுடைய மனமார்ந்த பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும் அன்புடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

கே. எஸ். நரசிம்மன்

# வாழ்த்துரை

**கவிஞர்: கண்ணதாசன்**

செம்பொனுள் தமிழ்மீ னுட்சி
　　திருவளர் சுந்த ரேசர்
தும்பிக்கைப் பிள்ளை யோடும்
　　துணைதந்து தங்க மக்கள்
நம்பிக்கை வளர்த்து நாளும்
　　நல்மெலாம் பெருகச் செய்யும்
கம்பனூர்க் கோவில் இன்று
　　கவின்பெறக் காண்கின் றேமே!

சிவகங்கை வளர்த்த வேந்தர்
　　திருக்கோவில் கட்டிக் காக்க
நவமணி விளையும் பூமி
　　நல்கினுர் துணையும் நின்றுர்!
சிவன்–கங்கை அருளால் வாழும்
　　திருக்குல **மன்னர் சேவை**
தவமெனக் கம்ப னூரில்
　　தமிழ்மணம் பெறக்கண் டோமே!

தண்முகக் கடவுள் கோவில்
　　தனிப்பொலி வடையு மாறு
ஒண்மிகும் கலச மேற்றி
　　உயர்குட முளக்குக் காணும்
**சண்முகம் பெருமை** பெற்றுன்
　　தன்னரும் பணியி னுலே!
கண்ணுதற் கடவு ளந்தக்
　　கண்ணியன் வாழ்வைக் காக்க!

உம்பரும் தொழுது போற்றும்
உயர்தனிக் கோவில்! அந்த
கம்பனின் றிருந்தால் பாடும்
கவின்மிகும் கோவில்! இன்று
நம்மூன்று குலத்து மக்கள்
நயமுடன் கட்டிக் காக்கும்
கம்பனூர்க் கோவில் வாழ்க
காண்கின்ற உயிர்கள் வாழ்க!

முன்னவர் செய்த தொண்டு
முறைப்படி அமைத்த கோவில்
மன்னவர் கொடுத்த செல்வம்
மக்களால் உயர்ந்த தெய்வம்
தென்னவர் பழமைப் பண்பு
திரண்டதோர் கலையின் சிற்பம்
பன்னெடுங் காலம் வாழ்க
பழமையிற் புதுமை வாழ்க!

நன்கொடை ஈந்த மேலோர்
நற்பணி புரிந்த நல்லோர்
பொன்கொடை கொடுத்த தூயர்
பொருளொடும் பணியும் செய்தோர்
இன்முகம் காட்டி நிற்கும்
இயற்பெரும் குடிகள் வாழ
தன்முகம் மலர்ந்த தெய்வம்
தனியருள் புரியு மாக!

கோட்டைவி நாயகர் தம்
கோவிலை எங்கள் நாட்டார்
கோட்டையாய்ப் புதித்த தாலே
கோமகன் சுந்த ரேசன்
பாட்டுடைத் தமிழ்மீ னாட்சி
பல்காலும் பக்கம் நின்று
நாட்டையும் காத்து மக்கள்
நலத்தையும் காப்பாளாக!

கண்ணதாசன்

டாக்டர் மெ. சுந்தரம், எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்
தமிழ்துறைத்தலைவர், மாநிலக் கல்லூரி.

# அணிந்துரை

"திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்று பெரியாழ்வார் பாடியருளினர். அத்தகு திருமல்கு மன்னர் பரம்பரையில் பெருவுலகம் இனிதேத்த வாழ்ந்து வரும் பெருமை சிவகங்கை மன்னர்களுக்கு உண்டு. தென்தமிழ்ச் சீமையாம் சிவகங்கையில் தமிழும், சைவமும் வளர்த்துத் திகழும் மன்னர் மரபின் இன்றைய பிறங்கடையாய் விளங்குபவர் கார்த்திகேய வேங்கடாசலபதி ராஜா அவர்கள்.

மன்னரின் பெருமை விரிப்பிற் பெருகும்; தொகுப்பின் எஞ்சும். கல்வி நீரோடை எல்லார்க்கும் பயன்படக் கல்லூரிகள், பள்ளிகள் முதலியவற்றை மன்னர் நடத்தி வருகிறார் அம்மட்டோ? நோயற்ற வாழ்வன்றோ குறைவற்ற பெருஞ் செல்வம் நோய் நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் மருத்துவ முனைவர்களைக் கொண்ட சித்த மருத்துவ மனையையும் அவர் செப்பமுற நடத்தி வருகிறார் இவை அனைத்தும் தடைப்படாதியங்க ஏறத்தாழ எட்டு இலட்ச ரூபாய்க்கு மேல் மன்னரவர்கள் ஈந்துள்ளார்கள் ஈத்துவக்கும் இன்பமன்றி வேறெதையும் நாடாத இயல்பினராய் மன்னர் எட்டுலட்ச ரூபாயைக் கொடையாக ஈந்ததில் வியப்பென்ன இருக்கிறது?

மன்னரின் மாண்பை விளக்க ஒரு சான்றைக் காட்டலாம், இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை! என்று கூறத்தக்க நிகரமை சமுதாயத்தை அமைக்கும் பெரும்பணியில் ஈடுபட்டிருக்கிறார்.

'நான் மன்னராக வாழ விரும்பவில்லை மக்களில் ஒருவனாக வாழ விரும்புகிறேன், என்று தாமே முன்வந்து கூறினார் நிகரமை அரசு என்னும் பாலத்தைக் கட்டுவதில் அவரும் ஒரு அணிலாக முன்வந்தார். 'உலகம் எவ்வழி அதுவே நம்வழி, என்று உணர்ந்து மானிய ஒழிப்பை மனம் உவந்து ஏற்ற மன்னர் பெருமானை எத்துணை பாராட்டினாலும் தகும்.

மன்னரவர்கள் தமிழ்மீது தணியாத பற்றுக்கொண்டவர். தமிழ்மொழித் தொண்டே தலையாய தொண்டாக எண்ணிப் பணியாற்றும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் மீது தீவிரக் காதலும், விடுதல் அறியா விருப்பும் கொண்டவர்.

'தமிழும் சைவமும்' ஒன்றென்பது மன்னரின் எண்ணம், தமிழ்ப்பணி போலவே இறைப் பணியும் தேவை என்று உணர்ந்தவர் அவர். எனவே தமிழ்நாட்டில் உள்ள பல கோயில்களுக்கு மானியம் வழங்குதல் கோபுரம் செப்பனிடுதல், திருவிளக்கு ஏற்றுதல், குடமுழுக்குச் செய்தல் முதலிய அறப்பணிகளை மன்னர் செய்து வருகிறார் ஏறத்தாழ 108 திருக்கோயில்கள் மன்னரின் ஆட்சியில் உள்ளன. விழாக் காலங்களில் பட்டிமன்றம், கருத்தரங்கம்க வியரங்கம் முதலியவற்றை நடத்தித்தமிழ்ஆர்வத்தைஊட்டிவருவதிலும் மன்னர் தவறுவதில்லை. ஆண்டுதோறும் அவர் நடாத்தும் திருப்பாவை திருவெம்பாவை விழாக்கள் தமிழ் உணர்வு, உடையோர்க்குத் தக்க விருந்தாகும்.

மன்னரின் குடமுழுக்குப் பணிகளுக்கு உறுதுணையாக இருக்கும் பெருந்தகையார் திரு. வயி. சண்முகம் செட்டியார் அவர்கள் ஆவார்கள்! அருள் நெறிச் செல்வர் என்று ஆன்றோர்களால் பாராட்டப்படும் பெருமையும் அவர்களுக் குண்டு. தமிழ்ப்பணி செய்வதிலும், இறைப்பணி செய்வதிலும் பின்னிடாத பேரார்வம் காட்டுபவர்கள் நகரத்தார்களே கொட்டும் முரசங்கள் கோபுரங்கள், ஆலயங்கள், எட்டெட்டுத் திக்கும் நகரத்தார் இசைபாடிக் கொண்டிருக்கின்றன. இது நாடறிந்த உண்மை திரைகடல் ஓடித்திரவியம் தேடுவதும் ஈட்டிய செல்வத்தை வறியார்க்கு ஈந்து இசைபட வாழ்வதும் நகரத்தாரின் இயல்பேயான பண்பு. இப் பண்பாட்டின் பாரிய பேரொளி விளக்கமாய்த் திகழ்பவர் திரு. சண்முகம் செட்டியார் அலைகடலுக்கு அப்பால் கலை மணம் கமழும் மலேயப் பெருநாட்டில் தமிழர் திருநாள் விழாவினை ஆண்டுதோறும் சிறப்புற நடாத்துவதில் திரு. சண்முகனுருக்கு முதற்பெரும் பங்கு உண்டு. தமிழவேள் திரு. சாரங்கபாணி அவர்களின் வழிநின்று இத்தமிழ் விழாவை வலிவும் பொலிவும் பெறநடத்துபவர் நம் சண்முகனுர் அவர்கள். ஆண்டு தோறும் மலேயா செல்லும் தமிழ்ப் பேராசியர்களின் தாளாளராக இருந்து திரு, சண்முகனுர் ஆற்றும் பணி அருந்தமிழ்ப்பணியாகும்.

சிவகங்கை மன்னரின் சீரிய கொடையால் நடைபெற இருக்கும் கம்பனூர்க் கோயில் குடமுழுக்குக்குப் பெருமுயற்சி எடுத்துக் கொண்டவர்களில் நாச்சியாபுரம் சண்முகனுருக்கும் பெரும் பங்குண்டு, குடமுழுக்கு விழாவினை வெற்றித் திருவிழாவாக்கிய பெருமை திரு சண்முகனுர் அவர்களுக்கு உண்டு.

கம்பனூர்க் கோயில் வரலாற்றுப் புகழ் வாய்ந்த பெருங் கோயில் இக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர்க்கு கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் என்று பெயர் மதுரை மன்னர் விஜயரங்க சொக்கநாத நாயக்கரால் அந்தணர்களுக்குத் தானமாக வழங்கப்பட்டது என்று வரலாறு கூறுகிறது

61 ஆண்டுகளுக்கு முன்னர் 1911 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11 ஆம் நாள் இரண்டு இலக்கம் வெண் பொற்காசுகள் செலவழித்துக் குடமுழுக்குச் செய்யப்பட்டு உள்ளது. நீண்ட பல ஆண்டுகளுக்கு முன்னர் செலவிடப் பெற்ற இப்பெருந்தொகை, அக்காலத்துப் பெருந்தகையார் களின் பேருள்ளத்தையும் அருள்மனத்தையும் படம்பிடித்துக் காட்டுவதாகும். இத்தகு வரலாற்றுச் சிறப்பும். பழம் பெருமையும் கொண்ட தருமாசனக்கிராமத்தின் திருக் கோவில், குட முழுக்குவிழாக் காண இருப்பது நாட்டோர் செய்த நற்றவமாகும். இந்நேரத்தில் சிவகங்கை மன்னரையும் சண்முகம் செட்டியாரையும் இத்தவச் செல்வர்களை இறைப்பணியில் ஈடுபடுத்திய கம்பனூர் இறைவனையும் மனம், மொழி, மெய்களால் வாழ்த்துவதைத் தவிர வேறு என் செய்ய இயலும்?

மற்றொரு சிறப்புச் செய்தி: இக்குடமுழுக்கு விழாவின் போது "கம்பனூர்த் தலவிளக்க நூல்" என்ற ஒன்றும் வெளியிடப் பெற இருக்கின்றது, இந்நூலை எழுதியிருப்பவர் புலவர் இரா. வில்லாளன் அவர்கள் சிவகங்கை அரசர் உயர்நிலைப்பள்ளியில் தமிழ்ப்பணி புரியும் சான்றோர் இவர். சொல்வன்மையும், எழுத்துவன்மையும் சான்ற நற்றமிழ் ஆசான். தமிழ் உணர்வினை யாண்டும் பரப்பும் தலைமைத்

தொண்டில் தம்மை ஈபடுத்திக் கொண்டுள்ள தக்கார் சான்றுகளுடன் எழுதப் பெற்றிருக்கும் இந்நூல் இறை யன் பர்களுக்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை ஊர்பற்றியும், இறைவர் பற்றியும் அறிய விரும்புபவர்க்கு இந்நூல் ஒரு கைவிளக்காக நின்று உறுதுணைபுரியும் ர்என் பது ஒருதலை. சிறப்புற இந்நூலை ஆக்கிய செந்தமிழ்ப் புலவர் வில்லாளன் அவர்களை வாழ்த்துகிறேன்.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டு விட்டால்
இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே"

சென்னை
31-7-1972

மெ. சுந்தரம்



# நன்றி.

''நன்றி மறப்பது நன்றன்று" இதுவள்ளுவர், வகுத்த வாழ்க்கை நெறி. கம்பனூர்க் கோயில் புதுப்பிக்கும், திருப்பணி தொடங்கிய பொழுது, நெறி நின்று நீடாளும், சிவகங்கை மன்னரவர்கள் கம்பனூர்த் தல விளக்கத்தை எழுதிட, எனக்கு ஆணையிட்டார்கள்,

கம்பனூர்க் கோயிலுக்கு மன்னரால் அளிக்கப் பெற்ற ''**தானக் கணக்கு**" மானியம் பெற்ற வழியில் வந்தவன் என்ற உரிமையிலும இன்று அவர்களின், ஆளுகைகுட்பட்ட அறிவாலயத்தில் பணி யாற்றும், தமிழாசிரியன் என்ற கடமை உணர்விலும் அச்சம் என்னை ஆட்கொள்ள, மன்னரின் ஆணைககு அடிபணிந்தேன்,

உள்ளம் இனிக்க ஒப்புக்கொண்ட இந்நூற்பணிசெயல் படுங்காலை, என் சிந்தனைக்கு வெகு தொலைவில் இருந்தது. காரணம்? கம்பனூர் ஒரு சிற்றூர். பாடல் பெற்ற பெருமையோ, சரித்திரச் சான்றுகளோ இல்லாத நிலையில் எடுப்பாரற்ற குழந்தைபோல இருந்தது. என்றாலும் ''முயற்சி தன் மெய்வருந்தக் கூலிதரும். என்றபடி

அகச்சான்றுகள், செவிவழிச்செய்திகள் சில, இந் நூலுக்குக் கருவாக அமைந்தன. இவற்றில் எதைஎடுப் பது, எப்படித்தொடுப்பது என்று மயங்கி நின்ற என்னைச் சொல்லாலும் செயலாலும் மன்னர் ஊக்குவித்தார்கள். ''முயற்சி திருவினையாக்கும்'' அதன் விளைவு இக்கம்ப னூர் தலவிளக்கம், தங்கள் கைகளிலே தவழ்கிறது,

யாருக்கு எபபடி இருந்தாலும் ''தாய்க்குத் தன் பிள்ளை உயர்வு'' கம்பனூர் மக்களுக்கு இந்நூல் கலங்கரை விளக்கமாகும்.

ஆலயங்கள், தெய்வங்கள், தலங்கள் பற்றிய அருமை பெருமைகளை எடுத்தாளும், அறிவும், வலிவும் இல்லா தவன் நான். இந்நிலையில் கன்னிமுயற்சியாக இத்தல விளக்கம் உருவாகியுள்ளது.

அறிவறியா என்னை; அறிவறிந்த சான்றோர்கள் அறி யும் வண்ணம், செய்த சிறப்பும் பொறுப்பும், சிவகங்கை மன்னர்க்கே சொந்தமாகும்.

சமயத்தில் விருப்பு வெறுப்பு இன்றி இருந்த என்னைச் ''சமயத்தில்'' விருப்புடன் ஒன்றிக் கம்பனூர்த் தல விளக்கம் எழுதும் பேற்றினைத் தந்தருளிய **மேதகு துரைசண்முகக் கார்த்திகேய மன்னருக்கு** நான் என்றும் நன்றிக் கடப்பாடுடையேன். பழம் பெரும் கோயில்களைத், தன்னகத்தேகொண்டிலங்குவது பாண்டியம் புதியாகும். இதில் கைமாறு வேண்டா கடப் பாடுடைய, சிவகங்கை மன்னர்கள் 108 திருக்கோயில் களைக் கொண்டு தெய்வத் திருப்பணி செய்து வந்திருக் கிறார்கள். இவற்றில் ஸ்ரீ கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயமும் ஒன்றாகும்.

காலத்தால் அழியாத கோயில்களுக்கு கொள்ளவல்லப மன்னர்களே, பரம்பரை அறங்காவலர்களாவர்.

"மன்னு வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே

என்றபுறப்பாட்டிற்கு இலக்கணமாக முன்னோர் வழி நின்று, ஒன்ரு உலகத்து உயர்ந்த புகழை விரும்பி ஈதல்,இசைபட வாழ்தல், கார்த்திகேயப் பார்த்திபர்க்கு பிறவிக் குணமாகும். இவர்களின் கனிவால் நான் பெருமை அடைகிறேன். நன்றி.

இந்நூலின் அழக்கு அழ கூட்டுவதுபோல் மாண்புமிகு மன்னரவர் கற்கண்டு சொற்களால் அணிந்துரை வழங்கியிருக்கிருர்கள்.

கம்பனூர்க் குடமுழுக்கு விழாவிற்கும், விழாவில் வெளியிடுகின்ற, கம்பனூர் தலவிளக்க நூலிற்கும், வாழ்த்துரை வழங்கியருளிய தமிழ்நாடு. அறநிலைத் துறை அமைச்சர். மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்களுக்கும் தொழிலாளர் நலத்துறை அமைச்சர் மாண்புமிகு. என், வி. நடராசன் அவர்களுக்கும், தருமையாதீனம், ஸ்ரீ. ல. ஸ்ரீ. சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளுக்கும், இந்து சமய அறநிலையத்துறை ஆணையாளர் திருமிகு. கே. எஸ், நரசிம்மன், பி.ஏ. ஐ,ஏ.எஸ், அவர்களுக்கும், கவிஞர் கண்ணதாசன் அவர்களுக்கும், என் நன்றியும் வணக்கமும் உரியதாகும்.

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கியதுடன், சிவகங்கை மன்னர் தலைமையில் மாநிலக்கல்லூரி, தமிழ்துறைத் தலைவர் டாக்டர். மெ சுந்தரம், எம். ஏ., எம்.லிட்.,

பி.எச்.டி. அவர்கள் இந்நூலை வெளியிட்டு வாழ்த்துரை வழங்குவது. நான்பெற்ற பெரும் பேருகும்.

இந்நூலை வெளியிடும் சிவகங்கைஅரண்மனை அற நிறுவனத்தாருக்கு, என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வணக்கம்

**இரா. வில்லாளன்**

# "கம்பனூர் தல விளக்கம்"

## தோற்றுவாய்

முத்துப்புகழ் படைத்து, மூன்று நெறிவளர்த்த பெருமை பாண்டிய நாட்டிற்கு உண்டு.

"கார் கடல் ஒலியிற் கலிகெழுகூடல்" என்று இளங்கோவடிகளாற் ஏற்றிப் போற்றப்பட்ட பதியெழு வறியாய்ப் பண்பு மேம்பட்ட மதுரைமூதூர், பாண்டிய நாட்டின் தலை நகரமாகும்.

"வையை என்னும் பொய்யாக் குலக்கொடி வளம் பல ஈந்து நலம்பல நல்கும் பெருமையும்" தமிழ்நிலை பெற்ற தாங்கருமதுரை" என்று சிறுபாணாற்றுப்படையால் சிறப்பிக்கப்படும் அருமையும் மாமதுரை நகருக்கே சொந்தமாகும்.

,, ஆயிரங்கண்ணோன் அருங்கலச் செப்பு
வாய் திறந்ததன்ன மதில்வரைப்பு,,

என்ற செல்வச்சிறப்புடைய மதுரை, அறிவும், திருவும், வலிவும், பொலிவும், கொண்டு வரலாற்று ஓவியமாக இன்றளவும் நின்று நிலவுகிறது.

இத்தகுமாட்சிமை தங்கிய மதுரையின் நேர் கிழக்கே நெறிநின்று நீடாளும் பெருமை கொண்ட சீமை சீர்மேவும் சிவகங்கைச் சீமையாகும். காலத்தால் அழியாது, கருத்தால் மேம்பட்டு ஞாலத்தில் தமக்கென வழிவகுத்து வழி வழி ஆண்ட மன்னர்களின் சீமையாகும். செம்மை செறிந்த சிவகங்கைச்சீமையின் ஆளுகைக்கு உட்பட்டது பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகும்.

முத்துக்குளித்து முத்தமிழ் வளர்த்த தமிழகத்தின் புகழ் மலர் காலத்தைக் கடந்து மணம் பரப்புகிறது. வைதாரையும் வாழவைக்கும் வண்டமிழால் பாமாலே புனை ந்த சமயச் சான்றோர்கள் மூவர். இம்மூவரால் பாடப்பெற்ற சிவத்தலங்கள்.

"கூடல், புனவாயில், கொடுங்குன்று பரங்குன்று
குற்றலம் ஆப்பனூர் பூவனம் நெல்வேலி
ஏடகம் ஆடானை திருக்கானப் பேர்சுழியல்
இராமேசம் திருப்பத்தூர் இவை முதலாம்"

தலங்கள் பதினுன்காகும்.

இதில் திருப்பத்தூர் திருத்தளிநாதர் ஆலயமும் ஒன்ருகும். திருப்பத்தூருக்குக் கிழக்குத் திசையிலும், முல்லேக்குத் தேரீந்த பரம்புமலேப்பாரி ஆண்ட கொடுங்குன்றம் என்ற பிரான்மலேக்குத் தென்திசையிலும் கானப்பேரி என்னும் காளேயார்கோயிலுக்கு வடக்குத் திசையிலும், குன்றக்குடிக்கும், யானேமுக அரக்கனேக் கொன்ற ஐந்துகரப் பெருமான் தன்ஐயனே வழிபாடு செய்யும் திருக்கோலத்தோடு வீற்றிருக்கும் பிள்ளேயார் பட்டிக்கு அண்மையிலும், நாட்டுக்கோட்டைத் தனவணிகர்கள் சிறப்புடன்வாழும், நாச்சியார்புரத்திற்கு, அருகிலும் உள்ள ஊரே காட்சிக்கினிய கம்பனூராகும்

**கம்பனூர்**

கவிபாடிப் பெருமை கொண்ட கம்பனின் பெயர் பொருந்தியிருக்கின்ற காரணத்தால் கம்பனூர்ப் பெயர்க் காரணம் பலவிதமாகப் பேசப்படுகிறது.



ஸ்ரீ. கோட்டை விநாயகர் ஸ்ரீ மீனாட்சி
சுந்தரேசுவரர் ஆலயம்.

வளமும் நலமும் நிறைந்த கம்பனூர், கடந்த காலச் சிறப்புகளைத் தன்னுள் கொண்டு தனித்தன்மை பெற்று விளங்குகிறது.

கம்பனூர், சிற்றூராக இருந்தாலும் அதன் பெயரளவில் இலக்கியத் தொன்மை பெற்றுக் கவிபாடிப் பெருமை கொண்ட கம்பனுக்கும் இவ்வூருக்கும் தொடர்பு உண்டோ என்று தமிழ்ச் சான்றோர்களை மயங்க வைக்கும் பெயர்ப் பெருமை கொண்டது. செம்மை போலும் சிவந்திருக்கும் மண்வளம், அவ்வூர் மக்களின் மனவளத்தைக் காட்டும், பரந்து கிடக்கும் பாறைக்கற்கள் அவர்களின் உறுதிப் பாட்டைக் காட்டும். ஆழமாக நீர் நிறைந்து காட்சிதரும் பாறைக்குளங்கள் அவர்களின் உழைப்பையும் செம்பருந்தின் சிறகு போலச் சிவந்திருக்கும் தண்ணீர் அவர்களின் சுவை நிறைந்த வாழ்க்கையினையும் படம் பிடித்துக் காட்டும்

கடந்த காலத்தில் கரடு, முரடான கற்கள் நிறைந்த கம்பனூர் இன்று நல்லோர்கள் உழைப்பால் புதிய பொலிவுடன் விளங்குகிறது. கம்பனூரின் கடந்த காலத்தைச் செய்தியாகக் கேட்போமானால், ஆதி முதல் இவ்வூருக்குக் கவியரசர் கம்பர் வந்திருந்தாரென்றும், வந்திருந்ததற்குச் சான்றாகச் சில கதைகளையும் சொல்லுகிறார்கள். குறிப்பாகக் கம்பர் நாட்டரசன்கோட்டைக்குச் செல்லும் வழியில், கம்பனூர் வழியாகச் சென்றார். நெடுந்தொலைவு நடந்து வந்த களைப்பால் பசிவருத்தியது. கண்கள் இருளப்பசியால் வருந்திய கம்பரை, அடையாளம் தெரியாத அவ்வூர் மக்கள் பசி போக்க முன்வரவில்லை. பசிப்பிணியால் சோர்ந்து துன்புற்றுக் கம்பர்

"கம்பனூரி லிருக்கும்

கயவர் குயவருக்குக்

கொம்பிலிருக்கும்

குயிலினிது"

என்று வேதனையுடன் பாடினர். பிறகு கம்பனூரரை விட்டுக் கடந்து செல்லும் பொழுது பறைச்சேரிப்பக்கம் சென்றார் என்றும், கம்பரின் பசித்த நிலையையும் களைத்த உடலையும் கண்ட அச்சேரிவாழும் எளிய, மக்கள் கம்பரின் களைப்புத் தீரக் கூழைக்கரைத்து, உப்பிட்டுச் சுவையுடன் கொடுத்தார்கள். கூழைக்குடித்துப் பசியடங்கிய பாவலர், மனம்மகிழ்ந்து சேரிவாழ்மக்களைப் பார்த்தார். காலத்திற் செய்த நன்றிக்குக் கைமாருகச் சேரிவாழ் மக்களைச் செவியினிக்க வாழ்த்தினர்.

"பார்ப்பான் கண்மாயப் பெருகப் பெருக!

பறைச்சேரி வாழ்க! வாழ்க!"

என்ற நாடோடிப்பாடலைக் கம்பனூர் மக்கள் செவிவழிச் செய்தியாக இன்றளவும் சொல்லி மகிழ்கிறார்கள்.

பார்ப்பான் கண்மாய் என்பது, கம்பனூர்க் கிராமத்தில் உள்ள கண்மாய்களில், குறிப்பிடத்தகுந்ததாகும். மேலும் மகாஜனங்கள் என்ற பிராமணருக்கு இனமாகத் தானம் பண்ணிக் கொடுத்ததாகச் சில சான்றுகளும் நமக்குக் கிடைத்துள்ளன.

கம்பர் கம்பனூர்ச் சேரிவாழ் மக்களை வாழ்த்திப் பாடியதாகக் கூறப்படும் நிகழ்ச்சி எந்த அளவிற்கு உண்மை என்பதை நம்மால் உயர்த்துணர முடியவில்லை

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னையறிந்தோதமிழை யோதினேன்?-என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ?
உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?"

என்று சோழனைப்பார்த்துப்பாடிய கம்பர், தனக்கு நிகர் தானே என்று கருதியகம்பர், புவியரசர்கள் போற்றும் கவியரசராகிய கம்பர், இந்த அளவிற்கு நிலைதாழ்ந்தும், பசிப் பிணிமேலிட்டும் இருந்திருக்க முடியாது. முடியுடை மூவேந்தர்களின் அன்புக்குப்பாத்திரமான கம்பர் இந்த அளவிற்குக் குறுகிய மனம் படைத்தவராகத், தன்னைத் தானே தாழ்த்திக் கொள்ளும் குணமுடையவராக, இருந்த தாகத் தெரியவில்லை.

"கம்பனூரி லிருக்கும்
கயவர் குயவருக்குக்
கொம்பிலிருக்கு
குயிலினிது"

என்றபாடல் பொருளாழம் மிகுந்து காணப்படுகிறது. எல்லாம் தெரிந்த பகுத்தறிவுள்ள மனிதன் தன் இனத்தைப் பேணிப் பாதுகாக்க வில்லை. குறிப்பாகத்தன் பசியைப் போக்க வில்லை என்பதைப் பறவை இனத்தைச் சேர்ந்த குயிலுக்கு ஒப்பிடுகிறார் கம்பர். குயிலுக்கு முட்டையிடத் தெரியும். ஆனால் மற்ற பறவைகளைப் போலத் தன் முட்டைகளைத் தானே அடைகாத்துக் குயிலுக்குக் குஞ்சு பொரிக்கத் தெரியாது. காகத்தின் கூட்டில் போய்க் குயில் முட்டையிட்டு விட்டுப் பறந்து விடும் காகம் தன்னுடைய முட்டை என்று கருதிக்குயிலின் முட்டையைப் பேணிப்பாது காத்துக் குயிலினத்தை உருவாக்கி விடும்.

எனவே மனிதனும் தன் இனத்தைப் பேணுவதில்லை கொம்பிலிருக்கும் குயிலும் பேணுவதில்லை. ஆனால் பகுத்தறிவுள்ள மனிதனைக் காட்டிலும் பகுத்தறி வில்லாப் பறவையாகிய கிளைகளில் கூடு கட்டி வாழும் குயில் சிறப்பானது. என்று எண்ணிக் கம்பர் சொல்லியிருக்கலாம்,

இந்நிகழ்ச்சியை உண்மையென்று கருதி இவ்வூர் மக்கள் பெருமையுடன் செல்லி மகிழ்கிறார்கள். என்றாலும் கம்பனின் பாலுள்ள அன்பும் அவன் பாட்டிலுள்ள சுவையும் தமிழ்மக்களின் குருதியில் இரண்டறக் கலந்து, கற்பனைக்கதைகளைச் சொல்லி மகிழ்கிறார்கள் என்றுதான் கொள்ள வேண்டும்.

இது போலக் கம்பர் பற்றிய செவிவழிச் செய்திகள் ஏராளமாக வழக்கில் இருந்து வருகின்றன. எனவே கம்பனூர்க் கிராமத்து மக்கள் கூறும் கதையும் அவைகளில் ஒன்று என்றே கொள்ள வேண்டும். அகச்சான்றுகள் இல்லாத நிலையில் எதையும் உறுதி செய்து கூறுவதென்பது உண்மையாக எழுதக்கூடிய சரித்திரத்திற்கு ஊறுவிளைவிப்பதாகும். எனவே இந்த அளவிற்குக் கம்பனூர்ப் பெயர்க்காரணம் நமக்குச் சுவையூட்டுவதாக இருக்கட்டும்.

## கோயிற் சிறப்பு

"நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினாற் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே"

என்றும்

> திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்..........
> அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே,,

என்று அப்பர் பெருமான் அருளிய வாக்கிற்கிணங்கச் சிவகங்கை மன்னர்கள் கோயில் கட்டுவித்தார்கள். அரசர்கள் இல்லையெனில் கோயில்கள் இல்லை. எனவேதான் இறைவன் இருக்குமிடமும், அரசன் இருக்குமிடமும் கோயில் என்று அழைக்கப்படுவதுடன் இருவரையுமே இறைவன் என்ற ஒரு சொல்லால் புகழ்ந்துரைக்கிறார்கள்

நம் நாட்டின் மொழி, இனம், கலை. நாகரிகம், பண்பாடுகளை உணர்த்தும் நிலைக்களனுகக் கோயில்கள் விளங்கின. விளங்கிவருகின்றன.

வான்முட்டும் கோபுரங்களைக் கட்டி, அங்கு இறைத் திருவுருவங்களை, வைத்துத் தேன்சொட்டும் தெய்வததமிழ்ச் காவியங்களைப்பாடச் செய்தார்கள்.

இராஜராஜசோழன், இராஜேந்திர சோழன் பொன் வேய்ந்தபராந்தகன் கோச்செங்கட்சோழன் போன்ற காவிரி நாட்டை ஆண்ட காவலர்கள் காலத்தில் அழியாத கற்கோயில்களை ஆண்டவனுக்கு எழுப்பி அழியாதபுகழ் பெற்றார்கள்.

அக்காலத்தில் ஆலயங்கள் பள்ளிகளாகவும் நாடக சாலைகளாகவும் மருத்துவ நிலையங்களாகவும தமிழிசை, சிற்பம் சித்திரம் வளர்க்கும் கலைக்கூடங்களாகவும் இருந்தன. பகைமனங்கொண்ட மாற்றார் படையெடுப்பின் போது மக்களை உள்ளிருத்திப் பாதுகாப்புத்தரும் பாடி வீடாகவும், கோயில்கள் கொண்டொழுகப்பட்டிருக்கின்றன.

இக்காலத்தில் கோயில்கள் பக்தி உள்ளம் கொண்டோர்க்கு அடைக்கலமாகவும், வரலாற்று ஆய்வாளர்களுக்கு காலத்தைக் கணிக்கும்சான்ருகவும், மன்னர்களின்மாட்சிமை விளக்கும் நினைவுச் சின்னங்களாகவும், தமிழகத்தின் கூர்ந்த கலையினை ஒளிவீசும், கலங்கரை விளக்கமாகவும் முக்காலத்தையும் அளந்து பார்க்கும் அளவு கோலாகவும் கோயில்கள் காட்சிதருகின்றன.

"தென்னுடைய சிவனே போற்றி" என்ற மணிவாசகப் பெருமானின் செப்பு மொழிக் கேற்ப பாண்டியம்பதி பழம் பெருங்கோயில்களை அவ்வப்போது உருவாக்கி இறைவன் புகழ்பாடியது.

அப்புகழிற்குப் புகழ் சேர்க்கும் முறையானே சிவகங்கைச் சீமையும் சரித்திரத்தில் இடம் பெறுகிறது. முன்னேடியாகத்திகழ்கிறது.

"உனக்குப் பணிசெய்ய உன்றனை யெந்நாளும்
நினைக்க வரமெனக்கு நீதா—மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநாதா"

என்பது போலச் சிவகங்கை மன்னர் பெருமானின் பேராதரவாலும், இவ்வூர்ப் பெருமக்களின் பேருழைப்பாலும் மாமதுரையில் கோயில் கொண்டுள்ள, சொக்கநாதரையும் மீனுட்சியையும் கம்பனூர்க் கோயிலில் வைத்து மீனுட்சி சுந்தரேசுவரர் என்ற திருப்பெயரால் ஆலயங்கட்டினர்.

மக்கள் மனமறிந்த சிவகங்கை மன்னர் மரபினரும், தெய்வத்திருப்பணியாகக் கம்பனூரில் கோட்டைப்பிள்ளையாருக்குக் கோயில் எழுப்பிவித்தார்கள் கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயமும் இன்று புதுமையுடன் திகழ்கிறது.

## மறுமலர்ச்சி

வாழ்க்கையை இலட்சியமாகக்கொண்டு, செல்வம், நிலையாமை யாக்கை நிலையாமை, இவைகளை நன்குணர்ந்த மன்னர்கள் கோயில் கட்டி வளமான செல்வத்தை ஈந்துவந்தாலும் இயற்கையின் சோதனையும், மக்களின் மாற்றமும், சூழ்நிலையும் கடவுள் வழிபாட்டிற்கு இடையூறாக இருப்பதுண்டு.

> "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
> வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

என்று, வள்ளுவர் கூறியது போல ஒரு காலத்தில் கட்டி முடிக்கப்பெற்ற கம்பனூர்க் கோட்டைப்பிள்ளையார் கோயில் பழமையின் சின்னமாக, வண்ணமழிந்து சுண்ணமிழந்து, சிற்பங்கள் சிதைந்து, கண்ணழிந்து நிற்கின்ற காட்சியைக் கண்ட கம்பனூர் மக்கள் கண்கலங்கி நின்றனர்.

கோட்டை விநாயகர், மீனாட்சி சுந்தரேசுவரர், வான் மழையின்றி வாடிவருந்தி நிற்கும் பச்சைப்பயிர் போலத் தன்னை நாடிவந்த பக்தர்களுக்கு வேண்டியதை வேண்டியாங்கு தந்தருளினார்கள்.

ஊர்ப்பெரியவர்கள் சிலரின் உள்ளத்தில்கோயிலைப் புதுப்பிக்க வேண்டும் என்ற எண்ணம் ப சு ம ர த் தா ணி போலப்பதிந்து, எண்ணியதை எண்ணியாங்கு முடித்திடும் திண்மை பெற்ற சான்றோர்கள் திட்டங்கள் வகுத்தார்கள். "உள்ளத்தளவு உயர்வு" அவர்கள் எண்ணப்படி கோயில் திருப்பணி கற்பனையில் புதுக்கோலம் பெற்றது. என்றாலும் கோயிலைப் புதுப்பிக்கும் திருப்பணியை உறுதியாகச் செய் வது என்று முடிவாயிற்று. சுற்றுமதிலைச் செப்பனிட்டு வண்ணம் சுண்ணம் பூசி உடைந்த பொம்மைகளைப் புதுப் பித்து, மின் விளக்குப் பொருத்திப் பொருள் வளத்திற் கேற்ப, ஆலயத்தைச் செப்பனிட ஊர்மக்கள் ஒன்றுபட்டார் கள்.

சிவகங்கை ச ம ஸ் தா ன ம் தேவஸ்தானம் திருக் கோட்டியூர் பிரிவைச்சார்ந்தது ஸ்ரீ. கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரரேசுவரர் ஆலயமாகும். சிவகங்கைமன்னரின் ஆளுகைக்குட்பட்ட நூற்றெட்டுத் திருக்கோயில்களில் இவ் வாலயமும் ஒன்றாகும். எனவே ஆலயத்திருப்பணி செய்ய மன்னரின் இசைவும், சிவகங்கை சமஸ்தானம் தேவஸ் தானத்தின் உறுதுணையும் இன்றியமையாதன என்பதை உணர்ந்த ஊர்மக்கள், சிவகங்கை மன்னரை வணங்கிக் கோயிற் திருப்பணி சம்பந்தமாக இசைவு பெற்றுவருவதற்கு ஒரு தூதுக்குழு சிவகங்கை சென்றது. தூதுக்குழுவினர் ஊர்மக்களின் முடிவையும், உள்ளநிலையினையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல மன்னரிடம் சொல்லி வேண்டினார்கள். மக்களின் மனமறிந்த மாமன்னர் மகிழ்ச்சிபொங்க மக்களைப் பாராட்டினார்கள். தூதுக்குழுவினரையும் வாழ்த்தினார்கள்



திருப்பணிக்குழுவினருடன் மன்னர் அவர்கள்

கோயில் புதுப்பிக்கும் திருப்பணிக்குத் தன்னையும் ஆட்படுத்திக் கொண்டார்கள். அனைத்து வழிகளிலும் மன்னர் உறுதுணை வழங்குவதாக வாக்களித்தார்கள். அத்துடன் நில்லாது திருப்பணி முடிந்ததும் கோயிலுக்குக் குடமுழுக்குச் செய்யும் பெரும் பொருப்பினையும் தாமே முன் வந்து உவந்து ஏற்றுக் கொண்டார்கள்.

எனவே கம்பனூர்க் கோயிலின் புரவலரும் சிவகங்கை மன்னருமாகிய திருமிகு. து. ச. கார்த்திகேய வெங்கடாசலபதி இராஜா அவர்கள் தலைமையில் திருப்பணிக்குழு அமைக்கப்பட்டது.

மாண்புமிகு சிவகங்கை மன்னரவர்களும் தவத்திரு குன்றக்குடி அடிகளார், எம். எல்சி. அவர்களும் புரவலர்களாக அமைந்தார்கள். அருள்நெறிச்செல்வர், நாச்சியாபுரம் திரு. பெரி. பெ. வயி. சண்முகம் செட்டியார் அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அம்பலம். திரு, சே. சு. வினைதீர்த்தான் செட்டியார் திரு. பெ. ந. சுப்பையாககோனர் மூவரும் துணைத்தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

கம்பனூர் ஊராட்சி மன்றத்தலைவர் திரு. தே. சின்னக்கருப்பன் அம்பலம் செயலராகவும், திரு. மு. இலட்சுமணபிள்ளை திரு.ச. வெங்கடாசலநாயுடு, திரு. பழ. காசிவைரன் மூவரும் துணைச்செயலர்களாகவும் தேர்தெடுக்கப்பட்டார்கள்.

திரு. மு. திருக்கெங்கைநாதபிள்ளை

திரு. சி. பெ. இராமையாக்கோனர்

திரு. இரா. க. சேதுராமன் சேர்வை

திரு. அ. இராமசாமிக்கோனர்

திரு. வெ. மூக்கையாக்கோனர்

திரு. பழ. கிருஷ்ணன்

திரு. உல. இராமய்யாக்கோனர்

திரு. மு. அ. இராமசாமிக்கோனர்

திரு. மூ. சுப வேலுக்கோனர்

திரு. சி. கணபதி ஆசாரி

திரு. குப. சண்முகவேளார்

திரு. பழ. சோலைமலை

திரு. பெரி. சுப்பையா

ஆகிய பதினன்கு பேர்களை உறுப்பினர்களாகக் கொண்ட குழுவும் அமைக்கப்பட்டது.

ஊர் மக்களின் உயர்ந்த எண்ணத்தின் வழி கோயிற் திருப்பணியும் தொடங்கப்பட்டது.

## நின்ற சொல்லர் நீடுதோன்றினியர்

அறவழி நின்று ஆண்டவர்கள் சிவகங்கை மன்னர்கள். ஆண்டவனுக்கு ஆலயம் எழுப்பினுர்கள் பள்ளிகளும், கல்லூரியும், கட்டுவித்தார்கள். ஏழையின் சிரிப்பில். இறைவனைக்கண்டார்கள். எனவே இருகைகள் சிவக்கப் பொருளை வாரி வழங்குகின்ருர்கள். ஆம்! வருவாயுள் கால் வழங்கி வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வருகின்றவர்கள் படைமடமும், கொடைமடமும், ஒருங்கிணைய நெறிநின்று நீடாளுகின்றவர்கள்.

சிவகங்கை வீரத்தின் விளைநிலம்-மன்னரின் நெஞ்சு ஈரத்தின் உறைவிடம் சிவகங்கை மண் சிவப்பு-மன்னரின் உள்ளமும் செம்மையுடைத்து. என்ற தண்தமிழ்ச் சொல்லுக்கு தனி இலக்கணம் வகுத்தவர்கள். அந்த வல்லார்வகுத்த வழிநின்று வள்ளுவர் குறள்பாடும் கோமகன்.

**"நெல்லும் உயிர் அன்றே நீரும் உயிர் அன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**
**அதனுல் யான்உயிர் என்பது அறிகை**
**வேல்மிகு தானை வேந்தர்க்குக் கடனே"**

**என்ற மோசிகீரன் பாட்டிற்கு எடுத்துக்காட்டாய்க் குடிதழீஇக் கோலோச்சும் மன்னர் பரம்பரையில் வந்துதித்த செவ் வாழைத்தரு, துரை சண்முகமன்னர்பெற்றெடுத்தகான்முளை காட்சிக்கெளியராய்க், கடுஞ்சொல் வெறுத்து இன்சொல் லால் ஈத்தளிக்கும், பெருங்குணம் படைத்த பாரி, காலத்திற்**

கேற்ற கருத்துவலிவு கொண்டு மக்கள் தொண்டாற்றும் மன்னர்.

இளமையிலே வளர்ச்சியான எண்ணங்கொண்டு கோயில் கட்டி குளம் தொட்டுக்காடுவெட்டிக் கழனிதிருத்திப் புது மைகள் படைக்க விரும்பும் புத்துலக சிற்பி.

புத்தம்புதிய உணர்வுகளை மீட்டிப் புதிய இலக்கியங் கள் சமைக்க விரும்பும் புதுமைப்பித்தன்.

இன்றைய இளையபாரதத்தை ஈடும் எடுப்புடன் நடத்திச் செல்லும் தகுதியும் மிகுதியும் உடைய அரசியல் மேதை. பதினாறு செல்வங்களையும் பெற்றுப் பெருவாழ்வு வாழவேண்டும் என்று சிவகங்கைச் சீமையை ஆண்ட கௌரிவல்லப அரசபரம்பரையில் பதினாருவது மன்னராகத் திரு. துரைசண்முககார்த்திகேய வெங்கடாசலபதி இராஜா அவர்கள் திகழ்கிறார்கள்.

கம்பனூர் மக்களின் கருத்துப்போல் அருளும் பொருளும் வழங்கினார்கள். கோயில் திருப்பணி முடிந்த வுடன் குடமுழுக்குச் செய்திடும் பெரும் பொறுப்பையும் தானே அருளோடு ஏற்றுக்கொண்டார்கள். நிறைவுறும் கோயில் திருப்பணிக்கு நிறைகுடமாக நின்றிலங்குவார்கள் என்ற எழில் விளக்கத்திற்கு எடுத்துக்காட்டாகச் சாதாரண ஆண்டு தைத்திங்கள் 15-ஆம் நாள் (28-1-71) வியாழக் கிழமை காலை 11 மணியளவில் ஸ்ரீ கோட்டைவிநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் புதுப்பிக்கும் திருப்பணி மாண்புமிகு சிவகங்கை மன்னரவர்களால் தொடங்கி வைக் கப்பட்டது.



திருப்பணியைத் தொடங்கி வைக்கும்
சிவகங்கை மன்னர்



கோட்டைப்பிள்ளையார்

## ஆலயம்.

"உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்

வள்ளற் பிரானூர்க்கு வாய்கோபுர வாசல்

தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் லிங்கம்

கள்ளப் புலனைந்துங் களா மணிவிளக்கே"

என்று கோயிலின் அமைப்பை மனிதஉடம்பிற்கு ஒப்பிட்டுப் பாடுகிருர் திருமூலர்,

கோயிலை, ஆலயம் என்றும் கூறலாம்.—ஆலயம், என்று பிரித்தால் ஆ என்பதற்கு ஆன்மா என்று பொருள் லயம் என்பது சேருவதற்குரிய இடம் என்பது பொருள். கடவுளது திருவடியில் ஆன்மாலயிப்பதற்குரிய இடம் எனப்பொருள் கூறலாம், கோஇல் கோயில் கோ என்ருல் கடவுள் இல் என்ருல் தங்குமிடம் கோயில் கடவுள் தங்குமிடம் என்று பொருள் கொள்ளப்படுகிறது.

## கோட்டைப்பிள்ளையார்

வஞ்சகத்தின் ஒன்ருனைத் துதிக்கைமிகத் திரண்டானை
வணங்கார் உள்ளே

அஞ்சரண மூன்ருனை மறைசொலுநால் வாயானை
அத்தன் ஆகித்

துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி யாருனைத்
துகளை மூனைச்

செஞ்சொல் மறைக் கெட்டானைக் கம்பனூர்க் கோட்டைச்
செழுங்களிற்றைச் சிந்தை செய்வோம்.

என்று பரமன் மகனைப் பார்வதி மைந்தனை, ஆறுமுகன் அண்ணனை, வணங்குதல் போல கோட்டைப்பிள்ளையார் கோயில் எழுந்தது,

விநாயகர் என்ற சொல்லுக்கு, நாயகன் இல்லாத வன் என்பது பொருள். அதாவது தனக்குமேல், ஒரு தலைவன் இல்லாமல் எல்லாம் தானாகி நின்று, ஆக்கல், அளித்தல் அழித்தல் ஆகிய முப்பெரும் செயல்களையும் முடிக்கின்ற மூர்த்தியாவார்

தன்னைத்தளைப்பவரும், செலுத்துபவரும் இல்லாத தன்மையர் என்றும் பொருள் கூறுவர். விக்கினங்கள்வரா மல் தடுப்பவராதலால், விக்கினேசுவரர் என்ற பெயரும் இவருக்குண்டு,

சிவ்பெருமானிடத்து ஓம் என்னும் நாதம் ஆதியில் பிறந்தது. ஓம் என்னும் பிரணவத்தின் வரிவடிவமே விநாயகர் வடிவம். அதன் ஒலி வடிவமே நாதபிந்துவாகும்.

இவருக்குக் கரங்கள் ஐந்து திருமூலர் "ஐந்து கரத்தனை ஆனைமுகத்தனை" என்று போற்றுகின்றார். போற்றுகின்றார். இவரது துதிக்கையில் ஒரு குடம் இருக் கிறது. இக்குடத்திலுள்ள நீரால் தந்தையையும் தாயையும் நீராட்டி வழிபடுகிறார்.

விநாயகர் ஆணுமல்லர், பெண்ணுமல்லர் அலியோ என்றால் அதுவுமில்லை. யானைத்தலை தேவ உடல் இவற்றைக் கொண்டிருப்பதால் விலங்கும் அல்லர், மனி தரும் அல்லர். தொந்திவயிற்றோடும், சப்பைக் காலோடும்

இருக்கிறர். இவற்றுல் விநாயகர் நாம் காணும் எவ்வகை இனத்தையும் சாராதவர் என்று உணரலாம், சிவனுக்குப் பிள்ளையார், முருகன் வீரபத்திரன் என்னும் மூன்று மக்கள் உள்ளனர், இவர்களில் விநாயகரே முதன்மையானவர் என்பதைப் பிள்ளையார் என்ற சிறப்புப் பெயரால் குறிக்கப் படுகின்றர். பிள்ளையாரை வணங்குவதால் பாசங்கள் விலகும், திருமகள் வந்துறைவாள் விக்கினங்கள் அகலும் இரு வினைகள் நீங்கும்.

''குருவடிவாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்து''

விநாயகரே குருவாக வந்து அருள்புரிவார் என்று ஒளவையார் கூறினர்.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே!

என்று யானை முகத்தனைப் பக்தியோடு வணங்குகிறர்கள். கம்பனூரில் கோயில் கொண்டுள்ள கோட்டைப்பிள்ளையார் துன்பம் போக்கி இன்பம் பயக்கவல்லவர் தாழ்ந்து தன் தாள் பணிவோர்க்கு, அருள் வழங்கும் அன்புத்தெய்வ மாகும் அந்தக்

'களியானைக் கன்றை கணபதியை செம்பொன்
ஒளியானைப் பாரோர்க்குதவும்—அளியானைக்
கண்ணுவதும்கைத்தலங்கள்கூப்புவதும்மற்றவன்தாள்
நண்ணுவதும் நல்லார் கடன்''

## முதற்கோயில் வரலாறு:

அழகாபுரி என்று பழையால் சிறப்பிக்கப்படும் நகரை ஆண்ட மன்னர் அழகேந்திரராசன் அழகாபுரி நகரத்தின் கிழ்க்கு வடகுரைக் கோட்டை வாசலில் பிள்ளையார் ஒன்றை அமைத்து வணங்கிப் போற்றியதால் இதற்குக் கோட்டைப் பிள்ளையார் என்று பெயர் வந்திருக்கலாம் என்று செவிவழிச் செய்தியாக அறிகின்றோம். இதுவே பின்னால் சிவகங்கை அரசரால் பெருங்கோயிலாக உருவாகியது.

ஆதி முதலாக அமைக்கப்பட்ட கோட்டைவிநாயகர் கோயில் மீனாட்சி அம்மன் சன்னதியில் மேல் பாகத்தில் தென்மேற்கில் கருப்பக்கிருகம் அர்த்தமண்டபத்துடன் கூடிய மண்டபத்தில் கிழக்கு நோக்கிக் காட்சிதருகிறார். பக்கத்தில் நாகரும் மூக்ஷிகவானமும் இருக்கின்றன.

## மீனாட்சி சுந்தரேசுவரர்

கோட்டைவிநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம் உயர்ந்த சுற்று மதிலுடன் காட்சி தருகிறது.

கிழக்குக்குடவரை வாசலில் சுமார் இருபத்தைந்து அடி உயரத்தில் சுவாமி இராஜ கோபுரமுடன் அம்மன் சன்னதி தெற்கு குடவரைசாசலில் (இருபது அடி) அடி உயரத்தில் இராஜா கோபுரமும் வான் தழுவி நிற்கின்றன.

சுவாமி கோபுரமும் அம்மன் கோபுரமும் பிள்ளையார் சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் பைரவர், கோட்டை

விநாயகருடன் கூடிய (ஒன்பது) விமானங்களுடன் கூடிய திருக்கோயில் சுமார் 41/2 ஏக்கர் பரப்பில் அமைந்துள்ளது.

சுவாமியின் கருபக்கிருகப் புறச்சுவரில் கல்வெட்டுக்கள் சிதைந்தும் அழிந்தும் தேய்ந்தும் காணப்படுகின்றன.

சுவாமி கோயிலின் கருபக்கிருகம் கிழக்கு நோக்கி, அர்த்தமண்டபம், மகாமண்டபத்துடன் கூடி அமைந்திருக்கிறது,

நந்தி என்ற சொல்லுக்கு எப்பொழுதும் ஆனந்த நிலையில் இருப்பவர் என்பது பொருள். இளமையும் திட்பமும் வாய்ந்தவர். இவர் ஒரு சித்தர், இவர் சிவசந்நிதியில் காவல் புரிகிறார். இவரது அனுமதி பெற்றே சிவதரிசனம் செய்தல் வேண்டும். இவருக்கு உருத்திரன் என்ற பெயரும் உண்டு. துக்கத்தை ஓட்டுகின்றவர் என்பதால் "இடும்மை நோய்ஓட்டும் ருத்ரன்" என்றுசிவஞான முனிவர் கூறுகின்றார்.

இந்த நந்தியம் பெருமானுக்குப் பக்கத்தில் அனுக்ஞை விநாயகரும். தென்புறத்தில் கிழக்கு நோக்கிச் சோமாஸ்கந்த மூர்த்தியும், மீனாட்சியம்மனும், வடபக்கத்தில் கிழக்கு நோக்கிப் பிள்ளையாரும், வள்ளி தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணிய சுவாமியும் வீற்றிருக்கிறார்கள்.

வள்ளியும் தெய்வயானையும் பழம்பிறப்பில் திருமாலின் பெண்மக்களாவார்கள். அவர்களுக்குச் சுந்தரி, அமுதவல்லி என்பது பெயர். திருமாலின் பெண்களாகிய இவர்கள் சக்தியின் அம்சமாவார்கள். இவர்களை இச்சாசக்தி கிரியா

சக்தி என்று என்று கூறுவார்கள். இவர்கள் முருகனைக் குறித்துத்தவமிருந்து பெருமை பெற்றவர்கள்.

சண்டேசுவரரும். அஸ்தரதேவரும் வடபாகத்தில் தெற்கு நோக்கி, நடராஜப்பெருமானும், சிவகாமிஅம்மனும் வலப்பக்கம் மாணிக்க வாசகரும் மகா மண்டபத்துள் உள்ளனர்.

## கருங்கல்மண்டபம்

கம்பனூர்க் கோயிலின் சிறப்புக்களில் பார்த்துப் பெருமைப்படக்கூடிய ஒன்று கருங்கல் மண்டபமாகும். கம்பனூர் தன் மலையிலிருந்தே உடைத்தெடுக்கப்பட்ட கருங்கற்களைக்கொண்டு கண்ணைக்கவரும்கருங்கல் மண்டபம் எழுந்ததுள்ளது.

நுண்மான் நுழை புலமிக்கக் கற்றச்சர்களால் கவினுற இழைக்கப்பட்ட கருங்கல் மண்டபத்தில் காட்சிக்கினிய கோலத்துடன் மீனாட்சியம்மன் கருப்பக்கிருகமும் அர்த்த மண்டபமும் உள்ளன.

“அருளது சக்தியாகும் அரன் தனக்கு
அருளை யின்றிச்
தெருள் சிவமில்லை அந்தச் சிவமின்றிச்
சக்தியில்லை,

சிவம் சக்தியோடு சேர்ந்து விளங்கினல், இவ்வுலகிலுள்ள இயங்தும் பொருள்களும், இயங்காப் பொருள்களும் ஆண் பெண் தன்மையாய்க் கூடி மகிழும். இன்றேல் அவை கூடாது பிரியும் என்ற சிவஞான சித்தியாரின் மெஞ்ஞான

வாக்கிற்கிணங்க, அருட்சக்தியாகிய இறைவி இவ்வூர்த் திருக் கோயிலில், மீனுட்சி என்ற திருப்பெயரால் தெற்கு நோக்கி வீற்றிருந்து அருள்பாலிக்கிருள்.

கிழக்குக் கோபுரத்தில் உட்புறத்தில் தென்பாகத்தில் மேற்கு நோக்கி, சூரிய நாராயண மூர்த்தியும், கோயில் உள்ளே அம்மன் குடவரையில், தென்பகுதி மண்டபத்தில் வடக்கு முகமாக அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திரு ஞானசம்பந்தர் என்ற சமயக்குரவர் நால்வரும் அமைந் துள்ளார்கள்.

இவர்களுக்கருகில் அகோரமூர்த்தி மேற்குநோக்கி அமைந்துள்ள காட்சியும், விஷ்ணுதுர்க்கை வடக்கு நோக்கி நெடிய தோற்றத்துடன், நிமிர்ந்த கோலத்துடன் சங்கு சக்கர அபயக் கரங்களுடன் நாராயணியாக வடபுறம் நோக் கிக் காட்சியளிக்கிருள்.

விஷ்ணுதர்க்கையின் அருகில் ஏழு கன்னியர்கள் வடக்கு முகமாகவும் ஐந்து தலை நாகரும் காட்சி விநாயகரும் கிழக்கு நோக்கி அமைந்திருக்கின்றனர்.

சுவாமி கோயிலில் சுற்றுப்புறத்தில் கோஷ்டபாகத் தில் தெற்கு நோக்கி நர்த்தன கணபதியும், வலப்புறத்தில் தட்சிணுமூர்த்தியும் தெற்கு முகமாகக் காட்சி தருகிருர்கள்.

சிவபெருமானது யோகநிலை தட்சிணுமூர்த்தியாகும். ஆலயங்களில் கருப்பக்கிருகத்தின் தென்பாகத்தில் தென் திசை நோக்கி வீற்றிருக்கிருர். ஆதலால் இவரைத் தென் முகக்கடவுள் என்றும். ஆலமர் செல்வன் என்றும், சைவ நூலுணர்ந்த சான்ருேர்கள் வழங்குவர்.

ஆலமர் செல்வனின் அருகில் பெருந்தவ சனகாதி முனிவர்கள் இரண்டறக்கலந்து வீற்றிருக்கும் நிலையில் காண்கிறோம்,

கோயிலில் மேற்பகுதியில் கன்னி மூலையில் கிழக்கு நோக்கிக் கன்னி விநாயகரும் ஐந்தலை நாகரும், பக்கத்தில் விசுவநாதரும் நந்தியும், அமைந்திருக்கிறார்கள்.

கோயில் கருப்பக்கிருக மேல்புற கோஷ்டத்தில் அண்ணாமலையார் என்ற லிங்கோதபவர் மேற்கு நோக்கி இருக்கிறார்.

கோயிலின் மேற்புறத்தில் வாயுமூலையில் சுப்பிர மணியசுவாமி வள்ளிதெய்வானையுடன் நின்ற திருக்கோலத் தில் காட்சிதருகிறார்கள்,

கோயிலின் கருப்பக்கிருக வடபுறத்தில் சுவாமியின் கோமுகியில் நான்முகன் வடக்கு நோக்கி நின்று கொண்டி ருக்கிறார்.

அருகில் தெற்கு நோக்கிச் சண்டேசுவரர் புஷ்பக விமான அமைப்புடன் கூடிய மண்டபத்துள் தெற்கு நோக்கி அமைந்திருக்கிறார்.

கோயில்களின் இறுதியாகச் சண்டேசுவரர் வழி பாடு அமைக்கப்பட்டிருக்கிறது இவரை வழிபடும் பொழுது மக்கள் மூன்று முறை தாளமிட்டு வணங்குவது வழக்கம் இதன் உட்பொருளைப் பலரும் பலவாறு கூறுவார்கள். சிலர் இவர் முன் நூலைப்போட்டு வழிபடு



தொடக்க விழாவில் வரவேற்புரை நிகழ்த்தும் நூலாசிரியர் வில்லாளன்

வார்கள். சண்டேசுவரரே சிவ வழிபாட்டின் பயனைத்தர வல்லவர். அதனுல் தான் ஆலய வழிபாட்டின் இறுதியில், அவரை வழிபட்டுச் செல்வது வழக்கம். இப்பேருண்மையை உணர்த்தும் பொருட்டே சேக்கிழார் பெருமான் சண்டேசுரரின் அவதாரத்தலமாகிய திரு சேய்ஞாலூரின் சிறப்பினைப்பற்றிப் பேசும்போது

**பண்ணின் பயனும் நல்லிசையும் பாவின்பயனும்**
**இன்சுவையும்**
**கண்ணின் பயனும் பெருகு ஒளியும் கருத்தின் பயனும்**
**எழுத்து அஞ்சும்**
**விண்ணின் பயனும் பொழிமழையும் வேதப்பயனும்**
**சைவமும்**
**மண்ணின் பயனும் இப்பதியின் வளத்தின் பெருமை**
**வரம்பு உடைத்தே**

என்று பாடியுள்ளது, என்றென்றும் எண்ணி இன்புறத் தக்கதாகும்.

கோயிலின் கருப்பக்கிருக வடபுறத்தில் சண்டேசுவரர்க்குப் பக்கத்தில் விஷ்ணுதுர்க்கை சங்கு சக்கரத்துடன் பொங்கும் திருக்கோலத்துடன் காட்சியளிக்கிருள்.

அம்மன் கோயில் கருப்பக்கிருக வடக்கு பிரகாரச் சனிமூலையில் வடகிழக்காக க்ஷேத்ரபாலகர் என்ற பைரவர் மேற்கு நோக்கி நின்ற வண்ணம் காவல்புரிகிருர்.

கிழக்குக்கோபுரவாயிலின் உட்புற மண்டபத்தில் நவக்கிரகங்களும் மேற்கு நோக்கிச் சந்திரனும் காட்சி தருகிருர்கள்.

சுவாமி சன்னதியில் நேர்வெளி மண்டபத்தில் இரண்டாவது நந்தியும் கொடிமரமும் அமைந்துள்ளன.

கிழக்கு இராஜகோபுர முன்புறத்தில் வெளியில் மூன்ருவது நந்தியும் அமைந்துள்ளது. கோயில் முகப்பில், கற்களால் அமைக்கப்பட்ட தாமரை பூத்த தாடகம் நீர் ததும்பி நிற்கிறது. கோட்டைப்பிள்ளையார் சேங்கை என்று பெயர் பெற்ற இக்குளத்தைச் சுற்றிலும், வானளாவி வளர்ந்த தென்னை மரங்களும், அடர்த்தியான செடிகொடிகளும் மண்டிக் கிடக்கின்றன.

இராஜகோபுரத்தின் தென்புறத்திருமதிலின் வெளிப்புறப்பகுதியில் கிழக்கு நோக்கிப் பிள்ளையாரும் நாகரும் இருக்கிருர்கள்.

கோட்டைப்பிள்ளையார் சேங்கை தென்மேற்கு மூலையில் மடைப்பள்ளி அமைந்திருக்கிறது.

கோயிலில் குதிரை வாகனமும், மூஷிக வாகனமும் ஊர் மக்களால் செய்து தரப்பட்ட கேடகமும், புதுமை குலையாமல் இருக்கின்றன.

கோயிலின் புறம்போக்கு நிலத்தில் கோயில் மெய் காவலராகச் சிவகங்கை மன்னரால் மானியம் பெற்றுப் பணியாற்றும் வலையர்கள் இத்திருக்கோயில் காவல் பணியாளர் களாகப் பணியாற்றுகிருர் கள்.

அதற்கு அருகில் இரண்டு கல்தொலேவில் உள்ள, நாச்சியாபுரத்திற்குச் செல்ல நெடுஞ்சாலே போடப் பட்டிருக்கிறது.

கோயிற் சுற்றுப்புறங்களில் தென்னே, மா, புளி வேம்பு, அரசு, போன்ற மரங்கள் நெருங்கி அடர்த்தியாக விளேந்து குளிர்ச்சியைத் தருகின்றன.

## கோயில் கொண்டுள்ள குருநாதர்

சிவன் கோயிலின் வடக்குப்பக்கம் கிழக்கு நோக்கிக் குருநாதன் கோயில் இருக்கிறது. இங்கே உருவாகியிருக்கும் குருநாதன், கோயில் கொண்டதைப்பற்றிப் பலரும் பல விதமாகப் பேசுகிருர்கள்.

ஓரளவு நம்பிக்கையின் அடிப்படையில் சிந்திக்க வேண்டுமாளுல், நிகழ்ச்சி என்ன என்பதை அறிந்து கொள்ளத்தான் வேண்டும். இப்பொழுது புதுப்பித்த திருப் பணிக்குமுன் 1903-ஆம் ஆண்டு ஜுலேத்திங்கள் 25-ஆம் நாள் இக்கோயிலேப் புதுப்பிக்கத் திருப்பணி வேலே தொங்கி 1911ஆம் ஆண்டு செப்டம்பர்த்திங்கள் 11 ஆம் நாள் (தமிழ் விரோதிகிருது ஆண்டு ஆவணித்திங்கள் 26ஆம் நாள்) குடமுழுக்குச் செய்யப்பட்டது.

இத்திருப்பணி செய்ய இத்திருக்கோயிலில் அறங் காவலராக விளங்கி வந்த அக்கால,சிவகங்கை மன்னர் பெரு மானிடம் இசைவு பெற்று 1903ஆம் ஆண்டு ஜுலேத் திங்கள் 25ஆம் நாள் திருப்பணி தொடங்கிய வித்தகர்கள் இருவர்.

நாச்சியாபுரம் பெரி. பெ. முத்தையா செட்டியார் என்ற நாட்டுக்கோட்டை நகரத்தின் தன வணிகரும் கோட்டை பிள்ளையார்கோயில் கொத்துக்கணக்கு மானியம் பெற்ற பெருங்கணக்கு, கூத்தகுடி இராமசாமி அய்யா அவர்களும் ஆவார்கள்.

ஆண்டு பலவாக நின்றிலங்கிய ஊர் மக்களுக்கு, உறுதுணையாக விருந்த கோட்டை விநாயகர் மீனாட்சிசுந்ரேசுவரர் ஆலயம், இயற்கையின் சோதனையால் அழகழிந்து நின்ற நிலைகண்டு சிந்தைகலங்கி, இந்தச் சான்றோர்களின் பெரு முயற்சியால் கோயில் திருப்பணி தொடங்கியது. திருப்பணியின் முதற்பணியாக ஒரு நல்லநாளில் கோயில் திருப்பணிக்கு அடிக்கல் நாட்டப் பள்ளம் தோண்டும் பொழுது, சனிமூலையில் அடித்தளத்துள், ஏதோ தட்டுப்பட்டன. புதையலாக இருக்குமோ என்று தோண்டியவர்களுக்கு அந்த இடத்தில் அச்சத்தை ஊட்டக்கூடிய, சில எலும்புகளும், மண்டை ஓடும்,திருநீற்றுச்சம்புடமும் தென்பட்டன. நெடுநாட்களுக்கு முன்மறைந்து போன யாருடைய எலும்புகளோ என்று கருதி அருவெறுப்புடன் தூக்கி எறியும் மனநிலையில் இல்லாமல், அது ஒரு புதிய உணர்வையும் சந்தேகத்தையும் எழுப்பியது, இதைப்பார்த்த பலரும் தத்தமக்குத் தெரிந்த பல நிகழ்ச்சிகளைக் காரணமாகக் கூறினர்கள்,

என்றாலும் அப்பொழுது வானம் தோண்டி வேலை செய்து கொண்டிருந்த அழகப்பக்கோன், அந்த எலும்புகளையும் மண்டையையும் விபூதிச்சம்புடத்தையும் அள்ளி அப்புறப்படுத்தி விட்டார். என்றாலும் அழகப்பக்கோன் கோயிற்

பணிமுடிந்து வீடு சென்றதும் உடல் நலங்குன்றினர். கடுமையான காய்ச்சல் ஏற்பட்டது, உணவு அருந்தவில்லை. உறக்கம் கொள்ளவில்லை. ஏதேதோ தொடர்பின்றிப் பேசிப் பிதற்றினர். முன்னுக்குப்பின் முரஞன அவரின் பேச்சைக் கேட்டு அவர் மனைவியும் மக்களும் அஞ்சி அழுதனர், குறி பார்த்தனர், சோதிடம் பார்க்கும் பலரிடமும் சென்று கேட்டனர். கடவுள் குறை என்று கருதிக் கடவுளுக்குக் காணிக்கை செலுத்தினர். அழகப்பக்கோன் நோய் தீரவில்லை. அவரின் நினைவற்ற பேச்சுக்கிடையில், எலும்பு மண்டையோடு, வீபூதி சாமியார் என்ற சொற்கள் அச்சத்துடன் வெளிப்பட்டன. இதை உற்றுக் கவனித்த மனைவியும் மக்களும், முத்தையாசெட்டியாரிடமும், இராமசாமி அய்யாவிடமும் கூறி முறையிட்டார்கள். இவர்கள் அப்புறப்படுத்தப் பட்ட அந்த எலும்பு, மண்டையோடு, விபூதி இவைகளைப் பாதுகாப்பாக எடுத்து ஒரு பானைக்குள் போட்டுத்தற் பொழுது குருநாதன் மண்டபம் இருக்குமிடத்தில் அடக்கம் செய்தார்கள் முறைப்படி அதற்குப்பூசை செய்து வழிபட்டார்கள்.

அதற்கு மறுநாளே அழகப்பக்கோன் நினைவு திரும்பி, சிறிது சிறிதாகக்காய்ச்சலும் குறைந்து முழு நலமடைந்தார். பிறகு அழகப்பக்கோன் அவ்வூரில் பல ஆண்டுகள் வாழ்ந்தார். அதிலிருந்து அவருக்குச் சாம்பல் அழகப்பக்கோன் என்ற பெயரால் அழைக்கப்பட்டார். அவருடைய வழியினரையும் கம்பனூர் மக்கள் இன்றளவும் சாம்பல் அழகப்பக்கோன் பரம்பரை என்றே அழைக்கப் படுகிறார்கள்.

எலும்புகள் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் தற் பொழுது இருக்கும் குருநாதன் மண்டபத்தைக் கட்டி ஆண்டுதோறும் குருபூசை விழாவும் நடத்தி வருகிறுர்கள்.

மற்ருெரு சாரார் ஒருநாள் இரவு நாச்சியாபுரம் பெரி. பெ. முத்தையா செட்டியாரின் கனவில் வெள்ளாடை உடுத்திய துறவி ஒருவர் தோன்றி என்னுடைய எலும்பு களையும் திருநீற்றையும் வைத்து எனக்கொரு மண்டபம் கட்டிக், குருபூசை செய்ய வேண்டும் என்று கட்டளையிட்ட தாகவும், அத்துறவியின் கட்டளையைச் செட்டியாரவர்கள் கூத்தகுடி இராமசாமி அய்யாவிடம் கூறினுர். பிறகு இரு வருமாகச் சேர்ந்து இந்தக் குருநாதர் மண்டபத்தைக் கட் டிக்குருபூசை செய்து வந்தார்கள் என்றும் கூறப்படுகிறது.

வேருெரு சாரார் ஒரு நாள் மாலை மங்கிய பொழுது, மழைதூறிக் கொண்டிருந்தது, வானம் இருண்டு பெரு மழைக்கு அறிகுறியாக இடி இடித்தது. அப்பொழுது முத்தையா செட்டியாரும், இராமசாமி அய்யாவும், கோட் டைப்பிள்ளையாரை வணங்குவதற்குக் கோயிலுக்கு வந்தார் கள். கோட்டைப்பிள்ளையார் சேங்கையில் இறங்கி, முகம் கைகால்களைத் தூய்மை செய்து கொண்டு படித்துறையில் ஏறும் பொழுது கோயிலின் வட மேற்கு மூலையில் இருள் படியும் அந்த நேரத்தில், கண்ணுக்குப் புலப்படாத உருவம் ஒன்று தோன்றித் தோன்றி மறைந்தது, இருவரும் சந் தேகத்துடன் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவர் கண்களுக்கும் வெள்ளை ஆடை உடுத்தித் துறவுக் கோலம் பூண்டிருந்த அந்த உருவம் அமைதியாகக் காட்சி

யளித்தது. இருவரும் அருகே சென்று பார்பதற்குள் அவ்வுருவம் மறைந்து விட்டதாகவும், அதை இருவரும் சிந்தித்து அந்தச்சாதுவின் உருவம் தோன்றிய இடத்தில் எலும்புகளையும் திருநீற்றையும் வைத்துக் குருசமாதியை உருவாக்கினுர்கள் என்றும் கூறுகிருர்கள்.

இந்தச் சமாதியில் இன்றும் ஒரு துறவி இருந்து பூசை செய்து வருகிருர். பூசைச் செலவிற்குப் பூலா ஊருணித் தோப்பிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு நித்திய பூசை நடந்து வருகிறது.

உலகத்தையும் உலகத்திலுள்ள உயிரினங்களையும் படைத்து,எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனுக்கு கோயில் எழுப்பினுர்கள்.

கோயிலைக்கட்டியதுடன் நில்லாது கோயிலைப்பாது காக்கவும், இறைவனை வழிபட்டு அருளது பெறவும், பொருளை வாரி வழங்கினுர்கள். மன்னர்கள், கண்ணுக் கெட்டிய தூரம் வரை நெல் விளையும் நன்செய் நிலங்களைக் கோயிலுக்குக் காணிக்கையாக ஈந்தார்கள் பதவிகளையும் அதற்குரிய நிலங்களையும் மானியமாக வழங்கினுர்கள்,

எனவே கோயில் கண்ணுங்கருத்துமாகக் கொண்டு நோக்கப்பட்டது இறைவனுக்குத் தொண்டு புரியும் சிவ நேசச் செல்வர்களாக அனைவரும் விளங்கினுர்கள்,

## மன்னர் மானியம் பெற்றவர்கள்

### தானக்கணக்கு அல்லது கொத்துக்கணக்கு

தேவஸ்தான நிலங்களுக்குச் சாகுபடி கணக்கு அனுப்புதல் , முக்கியப் பொறுப்பாளரைக் கூட்டி வந்து (பேஷ்கார்) புள்ளி பார்த்தல் களத்தில், ஒப்படி செய்து தேவஸ்தானத்துக்குரிய நெல்லைப் பிரித்துக் கோயிலுக்குக் கொண்டு வந்து சேர்த்தல். கணக்குகளை தேவஸ்தானத் திற்கு அனுப்புதல் போன்ற பணிகளைக் செய்பவர்க்குத் தாணக்கணக்கு மானியமாகச் சிவகங்கை மன்னர் வழங்கிய இறையிலிநிலங்கள், திருவாளிவாய்க்கால் முருகன் குறிச்சி ஏந்தலில் உள்ள வெட்டுச் செய் ஒரு ஏக்கர் 7 செண்டாகும்

### தானக்கணக்கு ஓலை முறி.

சாலிவாகன சகாப்தம் 1568 வியவருடம் ஆவணி மாதம் 16ஆம் தேதி (2 – 9—1645) ஆதிசேஷ மகாஜனங் களும் ஷை யூரிலிருந்த அம்பலம் தென்னன் செட்டியார் குமாரன் இராமநாதன் செட்டியாரும் கோயில் வன்னியி லிருந்து கூத்தகுடிலிருக்கும் ஆடியபாதம் பிள்ளை மகன் சிதம்பரமணியக்காரனுக்குக் கம்பனூர்க் கிராமத்துக் கொத் துக் கணக்கு வேலையை உம்பளமிராசுடன் எழுதிக்கொடுக் கப்பட்டுஷைவாரிசுதாரர்களால் இன்றளவும் நடத்தி வருகின் றார்கள். என்ற செய்தியினை ஓலை முறியின் மூலம் அறிகின் றோம்.

# ஊர் போற்றும் உத்தமர்கள்



பெரி. பெ. முத்தையா செட்டியார்



கூடர்நகுடி. இராமசாமி அய்யா

இதுபோல அம்பலம் செட்டியார்,அம்பலம் கோனார் களுக்கும் எழுதித்தரப்பட்ட ஓலே முறிகளும் உண்டு. என் பதைக் கீழ்க்கண்ட ஓலே முறி நமக்குச் சான்ருக உள்ளது

## அம்பலம் கோனார் ஓலே முறி

சாலிவாகன சகாப்தம் 1629 இல் (28-5-1806) கம்ப னூரிலிருந்த ஆதிசேஷ மகாஜனங்களால் தென்னங்கருப் பக்கோன் மகன் அடைக்கக்கோனுக்குக்,கம்பனூரில் இரண் டாவது அம்பலம் பாத்தியதை, எழுதிக்கொடுக்கப்பட்டு இன்றளவும் நடந்து வருகிறது.

## கோட்டைவிநாயகர் குருக்கள் மானியம்

கம்பனுடையான், ஏத்தகுளி, ஆலஞ்செய் ஆலடி சுந்தன், கொட்டிசை, திருவாளி வாய்க்கால், மணலரிசி வாய்க்கால், செழுங்கழுநீர் ஓடை, கொடிக்கால்கட்டை, பிள்ளையார்தளே, சோழதிடவல் நாற்றங்கால் போன்ற நிலங்கள் 13 ஏக்கர் 30 செண்ட் குருக்கள் மானியமாகச் சிவகங்கை மன்னர் வழங்கிய இறையிலி நிலங்களாகும். இத்துடன் சங்கு மானியம், கலசப்புரமானியம், மெய்காவல் மானியம் போன்ற பணிகளுக்கும் இறையிலி நிலங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

### ஊர் போற்றும் உத்தமர்கள்.

கடந்த அறுபது ஆண்டுகளுக்கு முன்னல் ஸ்ரீ கோட்டைப் பிள்ளையார் மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தில் வளர்ச்

சிக்கு முன்னேடியாக நின்று அரும்பாடுபட்டுக், கோயிலின் சென்ற திருப்பணி புதுப்பிக்கும் பணியைச் செய்வித்துக் குடமுழுக்குச் செய்த பெருமை, நாச்சியாபுரம் பெரி. பெ. முத்தையா செட்டியாரவர்களேயும் கூ த் த கு டி வீர. கு. இராமசாமி அய்யா அவர்களேயும் சாரும், கம்பனூர்க் கிராம வளர்ச்சியில் இந்தஇரண்டு சான்ருேர்களுக்கும் மிகுதியான ஈடுபாடு உண்டு. அல்லும் பகலும் கண்துஞ்சாது ஊர் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்திருக்கிருர்கள்.

"புணர்ச்சிபழகுதல் வேண்டா" என்ற குறளின்படி உணர்ச்சியுடன் பழகினுர்கள். கோப்பெருஞ் சோழனும், பிசிராந்தையும் போல, பாரிம் கபிலரும் போல, நட்பிற்கு இலக்கணமாய்த்திகழ்ந்தார்கள். அறிவறிந்த நண்பர்களாக ஆன்றவிந்தடங்கிய அறிவுச் சான்ருேர்களாகத், தோன்ருத் தோன்றி, துறைபல முடித்தவல்லவர்களாக, மன்னரும் மாசறக் கற்ருேரும் விரும்பும் வேட்கையுடையவர்களாய் வாழ்ந்திருந்தார்கள். நாச்சியாபுரத்தில் அன்று முதல்இன்று வரை, ஆன்றவிந்தடங்கிய அறிவுச் சான்ருேர்கள் பலர் தோன்றிய வண்ணமிருக்கிருர்கள். ஒவ்வொருவரும் பற்பல துறைகளில் தொண்டு புரிந்து புகழ் ஒளி பரப்பிநின்ருர்கள்.

அவர்களில்நாச்சியாபுரம் பெரியகருப்பன்செட்டியாரும் ஒருவராவர், பெரியகருப்பன் செட்டியார்க்கும், கருப்பாயி ஆச்சிக்கும் முறையே. முத்தையா செட்டியார், வயிரவன் செட்டியார், நாகப்ப செட்டியார், நாச்சியப்ப செட்டியார், என்ற மக்கள் நால்வர் இருந்தனர்.

"தந்தை சொல்மிக்க மந்திரமில்லை" என்ற பழமொழிக் கொப்பத்தந்தையின் வழிநடந்து, பெரும் பொருளீட்டினுர் கள் பொருள் ஈட்டுவதிலும், ஈட்டிய பொருள்களைக்காப்பதி லும் காத்த பொருளை வகுத்து, வரையாது வழங்குவதிலும் இந்நால் வரும் ஒருவரை ஒருவர்விஞ்சி நின்ருர்கள். இந்த நால்வரில் பெற்ருேர் பெருமையுற மூத்தமகனுகப் பிறந்த வரே முத்தையா செட்டியார் என்றசிவநேசச்செல்வ ராகும்

## மூத்தையா செட்டியார்.

நாட்டுக்கோட்டை நகரத்தில் பெருந்தன வணிகர். பகைவரும் பாராட்டும் பண்புள்ளவர். அருளும் பொருளும் இணைந்த சிவநேசச்செல்வர் சீரிய முயற்சியாலும் சிறந்த உழைப்பாலும் அறவழியிலே பொருளீட்டியவர். ஈட்டிய பொருளைக்கடவுள் திருப்பணிக்குக் காணிக்கையாகஈந்தவர். இவரின் முயற்சியால் மீனுட்சி சுந்தரேசுவரர் ஆலயமும், குருசமாதியும் கட்டப்பட்டுக், கோட்டைபிள்ளையார் கோயில் புதுப்பிக்கும் திருப்பணியும் குடமுழுக்கும் நடத்திடக் காரண மாயிருந்தவர்.

இவரின் தொண்டைப் பாராட்டி ஊர்மக்கள், சுவாமி கோபுரத்தின் விமானமேல்பாகத்தில்மேற்கு முகமாக இவருக்குத் திருவுருவச்சிலை செய்துவைத்திருக்கிருர்கள்.

## கூத்தகுடி இராமசாமி அய்யா

ஒரு காலத்தில் கூத்தகுடி இராமசாமி அய்யா என்ற திருப்பெயரைக் கேட்டுக் கூனன் நிமிர்வான். குருட

னும் ஒளி பெறுவான் நல்லவர் இல்லங்களிலும் உள்ளங் களிலும் தெய்வமாக இருந்தார்கள்.

ஏழை எளியோர்க்குத் தொண்டாற்றும் தூயோராக வாழ்ந்து மறைந்தமாமேரு.

உயர்ந்த தோற்றமும், உயரத்திற் கேற்றபருமனும்கணை யமரம் போன்ற கால்களும்,தேக்குமரம் போன்றகைகளும் காலனும்கண்டஞ்சும் சிவந்தவிழிப்பார்வையும்கறுத்த மேனி யும், பரந்த நெற்றியும், தடித்த உதடுகளும் அவைகள் தாங்கி நிற்கும் அடர்த்தியான நரைத்த மீசைக்காடும் முத்துப்போல் பளிச்சென்று ஒளிவீசும் பற்களும், வரிந்து கட்டிய பெரிய தலைப்பாகையும், இடுப்பில் கட்டப்பட்ட மெல் லிய வேட்டியும், யாரையும் அளந்துபார்க்கும் நிதான மும் பகைவரையும் அச்சுறுத்துவதாகும்.

அரசர்களும் கண்டு அவாவும் குணம் படைத்த இராமசாமி அய்யாவைப் பற்றி இன்றளவும் அப்பகுதி மக்கள் ,சிறு சிறு கதைகளாகச் சொல்லி மகிழ்கிறுர்கள்.

முத்தையா செட்டியாரின் தொளுக்குத் தோள் கொடுத்துத் தொண்டாற்றிய இவருக்கும்,ஊர்மக்கள்சுவாமி கோபுர விமானத்தின் மேல் பாகத்தில் மேற்கு முகமாக உருவச்சிலை செய்து வைத்து தங்கள் நன்றியைக் காட்டி யிருக்கிறுர்கள்.

இராமசாமி அய்யா இயற்கையடைந்த செய்தி கேட்டு அதிர்ச்சியடைந்த முத்தையா செட்டியார், என்னுடைய தோள்களில் ஒன்று இற்று வீழ்ந்து விட்டது. என் கண்

களில ஒன்று குருடாகி விட்டது. இல்லே! என்னுடைய உயிரே போய் விட்டது, என்று சொல்லி என்செய்வேன் யாரிடம் போய் உரைப்பேன் என்று புலம்பினுர்கள்.

இத்தத பெருமை பெற்று விளங்கிய கூத்தகுடி இராமசாமி அய்யாவின் வழியினர் இன்றளவும் சிறந்து விளங்குகிருர்கள், முன்னேடியாகத் திகழ்கிருர்கள்.

மன்னர்பிரான் வழங்கிய தானக் கணக்கு என்ற பட்டமும் அதற்குரிய மானியமும், அவர்களின் பெருமைக்குச் சான்ருக உள்ளன. கம்பனூரின் வளர்ச்சியிலும் கோயிலின் முன்னேற்றத்திலும் அப்பெரியாரின் வழிமேவி இணையற்று விளங்குகிருர்கள்.

நிகழும் திருப்பணிக்குழுவின் துணேச்செயலராக விளங்கும் மு. லெட்சுமணபிள்ளேயும், செயற்குழுவில் இடம் பெற்றுள்ள மு. திருக்கெங்கை நாதபிள்ளேயும், கூத்த குடி இராமசாமி அய்யாவின் வழித்தோன்றல்களாகும்.

சிவகங்கை மன்னர் வழியினர்க்கு நன்றியுணர்வோடு செயலாற்றிய இந்த ஊர் போற்றும் உத்தமர்களே. இன்று நினேவு கூர்வது நம் கடமையாகும்,

## அருள்நெறிச் செல்வர்.

பெரி. பெ. முத்தையா செட்டியாரின் இளவல் பெரி. பெ. வயிரவன் செட்டியாரின், அருந்தவப்புதல்வர்தான் அருள்நெறிச் செல்வர் வயி. சண்முகம் செட்டியார் அவர்

களாகும். பெரிய தந்தையின் வழிநின்று சிவத்தொண்டு புரிந்து வருகிருர்கள்.

இன்றையத் திருப்பணிக்குழுத் தலேவராக இருந்து அரிய சேவைகள் செய்து வருகிருர்கள். இவர்கள் தமிழகத்தில் நாச்சியாபுரத்தில் 9–8–1913 ஆம் ஆண்டு பிறந்தார்கள். வாழ்க்கையின் பெரும்பகுதி சிங்கப்பூரில் வாழ்ந்து வருகிருர்கள்.

"திரைகடலோடியும் திரவியம் தேடு" என்ற முதுமொழியை மாற்றிச் சிங்கப்பூரில் சிவத்தொண்டும், தமிழ்த் தொண்டும் புரிந்து வருகிருர்கள்.

செல்வம் சேர்க்கும் பரம்பரையில் வந்த அருள் நெறிச் செல்வர் பொருளே விரும்பவில்லே. அருளே விரும்பினுர்கள்.

ஒன்ருஉலகத்தின் உயர்ந்த புகழை விரும்பிச் சிங்கப்பூரில் தமிழர் சமுதாயம் வாழப்பாடுபடுகிருர்கள். சேர்த்த புகழைச் செம்மையான வழியில் பயன்படுத்தி இல்லேயென்று வந்தவர்களுக்குப் புகலிடம் தந்தார்கள். அவர்களேத் தன் செல்வாக்கால் பெரிய பணிகளில் இருத்தினுர்கள். தமிழர்களுக்கெனச் சங்கம் வைத்து அவர்கள் நல்வாழ்விற்குச் சிங்கப்பூர் அரசுடன் போராடினுர்கள். சிங்கப்பூர் அரசு தமிழர்களுக்குப் பெரும்பான்மையளித்து, தமிழர் பிரதி நிதியாக அருள் நெறிச் செல்வரைத் தேர்ந்தெடுத்தது. ஜெ. பி. என்ற பட்டத்தையும் வழங்கிப் பெருமைப்படுத்தியது.

எளிமையும் இனிமையும் கொண்டு காலத்தைப் பொன்னுகக்கருதக் கூடியவர்கள். "காலத்தை நாம் கொன் ருல் காலம் நம்மைக் கொன்றுவிடும்" என்ற பொன் மொழியை அடிக்கடி வலியுறுத்துவார்கள்.

தேனீப்போன்ற, சுறுசுறுப்புக் கொண்ட இவரின் அயராத முயற்சியால்தான் பெரும் பொருள் திரட்டப்பட்டுக் கோயில் திருப்பணி நடைபெற்றது.

எல்லா நலங்களும் பெற்ற அருள்நெறிச் செல்வர் இன்றுபோல் என்றும் தமிழ்த்தொண்டும் சைவத்தொண் டும் செய்திடக் கோட்டைப்பிள்ளையார் அருள் புரிவாராக.

## தோற்றமும் தொன்மையும்.

கம்பனூர் என்று வழங்கப்பெறும் இக்கிராமத்தின் வரலாற்றை அறுதியிட்டு உறுதியாகக் கூறக்கூடிய சான்று கள் நமக்குக் கிடைக்கவில்லை இருக்கின்ற ஓரிருசான்று களும் மிகப் பிற்பட்ட காலத்தைக் காட்டுகின்றன.

கம்பனூர் மிகவும் தொன்மையான ஊர் என்பதை உள்ளத்தில் வைத்து, இருக்கின்ற அகச்சான்றுகளைக் கால வரையறையாகக் கொண்டு அதற்குப் பிற்பட்ட வளர்ச்சி யினைத்தான் இங்கே எழுதியிருக்கிறோம்.

கம்பனூர்க் கிராமம் இனும் ஸ்டேட்மெண்டில் கண்ட படி சாலிவாகன சகாப்தம் 1553க்குப் பிற சோற்பத்தி வருடம் புரட்டாசித்திங்கள் 8ஆம் நாள் (24-9-1630) மதுரையை ஆண்ட விஜயரங்க சொக்கநாத நாயக்கரால்,

சுப்பிரமணிய அய்யர் வகையருவுக்குக் கம்பனூர்க் கிராமம் ஒன்றையும், மாஜனங்களாகிய பிராமணுகளுக்கு இனுமாகத் தானம் பண்ணிக்கொடுத்து அதற்குரிய சிலாசாசனம் கம்ப னூர்க் கோட்டைப் பிள்ளையார் கோயில்தென்பக்கத்திலிருக் கிறது. என்ற குறிப்பை 1811ம் ஆண்டு இனும் கிராமம் முதல் பைசலில் இருந்தும் 19-11-1863. இனும் கிராமம் இரண்டாம் பைசலிலிருந்தும் காணமுடிகிறது. ஆனுல் இனும் ஸ்டேட்மெண்டில் கண்டபடி முதன் முதலில் கட்டப் பெற்ற, கோட்டைப்பிள்ளையார் கோயில் உட்புறத்திலும், வெளிப்புறத்திலும் பின்னுல் கட்டப்பட்ட மீனுட்சிசுந்தரேசு வாரர் ஆயலத்தின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் உள்ள அகச்சான்றுகளாகிய கல்வெட்டுக்கள் அழிந்து, தேய்ந்து சிதைந்து காணப்படுகின்றன.

மதுரையை நாயக்கமன்னர்கள் அரசாண்ட காலத் தில், அவ்வழிவந்த விஜயரங்க சொக்கநாத நாயக்கர் மகா ஜனங்களாகிய அந்தணர்களுக்கு, கம்பனூர்க் கிராமத்தை இனுமாகத் தானம் பண்ணிக்கொடுத்திருக்கிருர் எப்பொழுதுமே பரிசுப் பொருள் என்று கருதுமிடத்து தனித்தன்மையும் உயர்வும் கொண்டே விளங்கும். அந் நிலையில் இனுமாகக் கம்பனூர்க் கிராமம், அந்தணர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. இனும் பெற்ற பொருளால் பரிசுக் குரியவன் நிறைந்தபயனை அடைய வேண்டும். அத்தகு பயனை விளைவிக்கின்ற கிராமமாகக் கம்பனூர் இருந்திரு கிறது. எனவேதான் நாயக்க மன்னர் இக்கிராமத்தை அந் தணர்களுக்குத் தந்திருக்கிருர்.

24-9-1630 ஆம் ஆண்டில் நல்ல வளமான பயனைத்தருகின்ற கம்பனூர்க் கிராமம் இனுமாகப்தரப்பட்டிருக்கிறது.

எனவே நமக்குக் கிடைத்துள்ள காலக்கணிப்பைக் கொண்டு இக்கிராமம் வளர்ச்சி பெற்ற கிராமமாக இருப்பதால் அதனுடைய தோற்றம் 1630க்கு முன் சில நூற்றுண்டுகளைக் கொண்டதாகக் கொள்ளலாம்.

எனவே ஏறத்தாழ 600 ஆண்டுகட்கு முன்பிருந்தே கோட்டைப்பிள்ளையார் என்று வழங்கப்படும் கோட்டை விநாயகர் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும், என்று கருத இடமுண்டு.

இந்தக் கிராமத்தில் சிறப்பாக மகாஜனங்கள் என்ற அந்தணர்கள் வளமாக வாழ்ந்திருக்கிறுர்கள். அய்யனுர் சேங்கை ஊருணியிலிருந்து ஊருக்குள் செல்லும் பெருவழியில் இருபுறங்களிலும் அந்தணர் குடியிருப்புகள் இருந்திருக்கின்றன.

கம்பனூர்க் கிராமம் முழுவதும் முதன்முதலில் தர்மாசனக்கிராமமாக இருந்து இனும் பெற்ற அந்தணர்களால் வரிகளும், காணிக்கைகளும் செலுத்த முடியாத எளிய நிலையில், கம்பனூரில் பாதிக் கிராமத்தை அயனுகச் சிவகங்கை சமஸ்தானத்திற்கு மாற்றித் தந்திருகிறுர்கள். காலச்சூழ்நிலையில் வாழ்வில் வளம் காணுத அந்தணர்கள், வறுமையுற்று இயலாமையால் சிறிது சிறிதாக மீதியுள்ள சொத்துக்களையும், விற்றுவிட்டுக் கம்பனூர் கிராமத்திலிருந்தே வெளியேறிவிட்டார்கள்.

தற்காலே கோட்டை விநாயகர் கோயில் ஸ்தானிகராக (குருக்கள்) இருக்கும் அந்தணர் வீடு ஒன்று மட்டுமே மகாஜனங்காளாகிய அந்தணர்களின் அடையாளச் சின்னமாக இருக்கிறது.

சிவகங்கை மன்னர் பரம்பரைக்கு, மாற்றியமைக்கப்பட்ட கம்பனூர்க்கிராமம்,பரந்த நிலப்பரப்பைக் கொண்டது.

**கம்பனூர் நான்கெல்லேகள்:-**

கொரட்டி இலங்குடி கம்பனூர் முக்கூட்டுக் கல்லுக்கும், மேலமாகாணம் பாதரக்குடிக் கண்மாய் உள்வாய்க் காலுக்கும், மேற்கு தென்பாற்கெல்கை பாதரக்குடிக் கண்மாய் உள்வாய்க்கல்லுக்கும் கூத்தகுடிப்புரவு ஆவணக்காத்தான் புன்செய் வடவேலிக் கல்லுக்கும் வடக்கு. மேல்பாற்கெல்கையாவது, அளகாபுரிக் கோயில் தெருவீதிக்கல்லுக்கும், அதிகரம்புரவுக்கும் ஒழுங்கைக்கல்லுக்கும், பரையன் வயல்தெற்குக் கல்லுக்கும், முருகன் குறிச்சிக்கண்மாய் உள்வாயின் மேற்கடையில் அதிகரம் கப்பனூர், சிருவயல் முக்கூட்டுக்கல்லுகுக்ம் தேனுசிஅம்மன்கோயில் தேவஸ்தானம் நாச்சியார் வயல்கல்லுக்தும், மேற்கண்ட பள்ளக்கல்லுக்கும், ஈச்சங்காட்டுக்கல்லுக்கும்,பனந்தோப்புக்கல்லுக்கும் நல்லூர் வடக்குக் கல்லுக்கும், சீத்தப்பொட்டல் சூலக்கல்லுக்கும், நொண்டிப்பிள்ளேயார் வயக்கல்லுக்கும், கதவடிக்கல்லுக்கும் தெற்கு. இந்த நான்கெல்லேக்குட்பட்ட கம்பனூர்க் கிராமம் நத்தம் குடியிருப்பு. 33 ஏக்கர் என்று கணக்கிடப்படுகிறது.

## மக்கள் வளர்ச்சி

"நாடா கொன்றோ; காடா கொன்றோ;
அவலா கொன்றோ; மிசையா கொன்றோ;
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழிநல்லை; வாழிய நிலனே"

நாடாக இருந்தாலும் காடாக இருந்தாலும், இல்லை மேடாக இருந்தாலும், பள்ளமாக இருந்தாலும் என்ன? எங்கே ஆடவர் நல்லவர்களாக விளங்குகிறார்களோ நிலனே நீயும் நன்றாக விளங்குவாய்.

எனவே ஒரு நிலத்தைப் பொறுத்தது அல்ல வாழ்வும், தாழ்வும் அம்மண்ணிலேவாழும்ஆடவர்களைப்பொறுத்த தேயாகும். என்று ஔவை மூதாட்டிகூறிப் போந்தார்.

கப்பனூர் காண்பதற்குச் சிற்றூராக இருந்தாலும் இந்த பல தரப்பட்ட மக்கள்ஒன்றுமையோடு வாழ்கிறார்கள்,

தரைமேவி நிற்கும் மலைகளால் சூழப்பட்டுச், செம் மண்ணும் சரளைக்கற்களும் நிறைந்து காணப்படுகின்றன.

இவ்வூரில் அந்தணராகிய குருக்கள் அம்பலம் (செட்டியார்) அம்பலம் (கோனார்) கணக்கு ஆதினமிளகி பிள்ளை பரம்பரை, யாதவர்கள், நாயக்கர்கள், வேளார்கள், தச்சர் கள், கொல்லர்கள், ஆசாரிகள் இசுலாமியர்கள், வலையர்கள் வண்ணார், நாவிதர், அரிசனங்கள் என்று தொழிலின் அடிப்படையில் உருவாகி மக்கள் சாதியின் அடிப்படையில் வாழ்கிறார்கள்.

கம்பனூர்க் கிராமம் ஊராட்சியாகும். இவ்வூராட்சியில் இணைந்த பஞ்சாயத்து ஊர்கள். கூத்தகுடி, வலையபட்டி, வடுகபட்டி, நாச்சியாபுரம், நயினார்புரம், என்ற ஊர்களாகும். இப்பஞ்சாயத்தில் இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் வாழ்கிறார்கள்.

இன்றையக் கம்பனூர் ஊராட்சி மன்றத்தின் தலைவராகத்தே. சின்னக்கருப்பனம்பலம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பணி யாற்றிவருகிறார்கள். ஊரின் இரண்டாவது அம்பல உரிமை பெற்றஇவர் கோட்டை விநாயகர் ஆலயத்தைப் புதுப்பிக்கும் திருப்பணிக் குழுச் செயலராக இருக்கிறார்கள்.

மேலும் இங்கே ஊராட்சி மன்றத்துடன்,கிராமப் பொதுமன்றமும் இருக்கிறது. இதைச்சவுக்கைஎன்றும் கிராமச்சாவடி என்றும் அழைக்கிறார்கள். இங்கு ஊர் சம்பந்தப்பட்ட வழக்குகள், பூசை. பஞ்சாயத்து திருவிழாக்கள், பொழுது போக்கு, போன்றபொது நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன,

## பிறகோயில்கள்

கம்பனூரில் கோட்டைப் பிள்ளையார் கோயிலைத் தவிர இன்னும் பல கோயில்கள் உள்ளன.

பரணிக்கண்மாய்க் கரையில் கோயில் கொண்டுள்ள பரணி அய்யனார் என்ற பொய்சொல்லா மெய்யர் அய்யனாரும், அய்யனார் சேங்கை மேற்குக்கரையில் தக்காருடைய அய்யனாரும் கோயில் கொண்டுள்ளார்கள்.

மற்ற அய்யனர்கள் எப்பொழுதும் கிழக்கு முகமாக எழுந்தருளி இருப்பார்கள். தக்காருடைய அய்யனர் மட்டும் மேற்கு முகமாக எளிந்தருளியிருக்கிறர்.

சிவன் கோயிலுக்கு நேர் கிழக்கில் பூலா ஊருணித் தோப்பிற்குத் தென்புறமாக உள்ள திடலில், இளையநாச்சியம்மன் என்னும் தெய்வம் கண்கண்ட தெய்வமாகக் காட்சியளிக்கிருள், நிந்திய பூஜை நடந்து வரும் இக்கோயிலுக்குத் தனிமானியம் உண்டு, ஆண்டுதோறும் ஆனித்திங்கள் பத்தாம் நாள் திருவிழா மிகச் சிறப்புடன் கொண்டாடப்படும், திருவிழா நடக்கும் ஒவ்வொரு நாளும் சுவாமி புதுப்புதுவாகனங்களில் வீதிவலம் வருகின்ற காட்சி பக்திப்பரவசமூட்டும்.

திருவிழாவின் மணி மகுடமாக மதுவெடுப்பு நடைபெறும். சின்னஞ்சிறிய அழகுக்குடங்களில், தென்னம் பாளையினை வைத்துச் சிரிக்கும் பாளையில் சித்திரப்பூக்களைச் சூடுவார்கள். இந்த மதுக்குடங்களை மங்கலப்பெண்டிர்கள் மங்கல ஒலி எழுப்பித்தலைமேல் சுமந்துவருவார்கள். இரவு முழுவதும் நின்று நின்று முறை வைத்துமதுக்குடம் தூக்குவது, மாதர்களுக்கு மட்டற்றமகிழ்ச்சிதருவதாகும்.

திருவிழாவின் இறுதிகாட்சியாகப்பண்டைத் தமிழகத்தின் வீரவிளையாட்டுகளில் ஒன்ருன ஏறு தழுவுதல் என்ற மஞ்சுவிரட்டு நடைபெறும்.

"கொல்லேற்றுக் கோடஞ்சுவானைப்
புல்லாளே ஆயமகள்"

என்று கலித்தொகை கூறும். உறுதிகொண்ட வீரமறவர் தம் உயிரைப் பணயம் வைத்துக் காளைகளை அடக்கிவெற்றி பெற முயலுவார்கள். காளைகளை அடக்க ஆண்மையின்றிக் கோழைகளாய் இளைஞர்கள் குனிந்து செல்லும் காட்சி. உயிரைப்பணயம் வைத்து முரட்டுக் காளைகளை அடக்கிய காளைகள், செம்மாந்து திரியும் காட்சி. கோழையை வீரனுக்கும் தன்மையுடையது, பெரிய திடலில் நடக்கும் இந்த வீர விளையாட்டைப் பெருந்திரளான மக்கள் கூடியிருந்து பார்ப்பார்கள்.

மேலும் வாடிக்கருப்பர் கோயிலும் அந்தரநாச்சியம்மன் கோயிலும் இருக்கின்றன. வள்ளியம்மை சேங்கை ஊருணியின் கரையில் வள்ளிவிநாயகர்கோயில்இருக்கிறது

இவ்வாறு நான்கு திசைகளிலும் கடவுளர்கள் கோயில் கொண்டு,கள்ளமில்லாத கம்பனூர் மக்களை எல்லைத் தெய்வங்களாக நின்று காத்து வருகிறார்கள்.

## காட்டுநாச்சியம்மன் கோயில்.

காரைக்குடியிலிருந்து நாச்சியாபுரம் வழியாகத் திருப்பத்தூர் செல்லும் வழியில் கம்பனூருக்கு மூன்று கல் தொலைவில் காட்டுக்குள் அமைந்திருக்கும் அம்மன் காட்டு-நாச்சியம்மனும், இக்காட்டுநாச்சியம்மன் கோயிலும் சிவகங்கை மன்னரின் ஆளுகைக்குட்பட்டதாகும்.

ஏறத்தாழ 400 ஆண்டுகள் பழமையான இக்கோயில் வடக்குப்பார்த்து அமைந்துள்ளது, கோயில் கொண்டுள்ள அம்மையின் பெயர் காட்டுநாச்சியம்மன் என்பதாகும். இத

தெய்வம் மற்ற தெய்வங்களைப்போல் நாட்டுக்குள் இல்லாமல் காட்டுக்குள் இருப்பது கிந்தனைக்குரியதாகவும் சில, சமயம் வேடிக்கையாகவும் இருக்கிறது.

ஊருக்குள் அழுகின்ற ஒலியும் நெல்குற்றும் ஒலியும் அரிசி தீட்டிப்புடைக்கும் ஒலியும் இன்னும் வேறு பல ஒலிகளும் கேட்கப் பொறுக்காமல் அம்மை குடியிருப்புகளை விட்டு நீங்கிக் காட்டின் நடுவே சென்று தனிமையில் கோயில் கொண்டுள்ளாள்,

கருவறையில் அம்மை மகிடாசூரமர்த்தினி கோலத்தில் காட்சியளிக்கிருள். எட்டுக்கைகளிலும் ஆயுதங்கள் தாங்கியும் அவள் திருக்கோலம் பார்ப்போரை அச்சுறுத்தும் தன்மையுடையதாகும்.
கோயிலைச்சுற்றிக் கோட்டை இருந்ததாகக்கூறுகிருர்கள். ஆனல் சான்றுகள் ஏதுமில்லை. சிதைந்த செங்கற்கள் மட்டும் அங்குமிங்கும் சிதறிக்கிடக்கின்றன. இரண்டு கால வழிபாடு நடைபெறுகிறது. காட்டு நாச்சியம்மனுக்கு வழிபாடு செய்பவர்கள் உவச்சர் குலத்தைச் சேர்ந்தவர்களாகும்.

திருவிழா நடைபெறுவதாகத்தெரியவில்லை.

## கண்மாய்கள்.

நிலவளத்தில் சிறந்து விளங்கும் கம்பனூர், நீர்வளத்திலும் சிறந்து விளங்குகிறது. இங்குள்ள நன்செய் புன்செய்களை விளைவிக்க வானம் வறச்குமேல் காலத்தில் பெய்கின்ற மழை நீரைக்கொண்டு கண்மாயில் தேக்கித் தேவைப்படும் பொழுது உழவிற்குப் பயன்படுத்தி உழு தொழிலைப் பேணுகிருர்கள்.

ஊரைச்சுற்றிலும் மிக அருகில் வயல்களில் பச்சைப் பசும்பயிர்கள், கண்ணுக்கெட்டிய தூரம் காட்சி தரும். பச்சைக்கம்பளம் விரித்ததுபோல் அழகூட்டும் இக்காட்சி இவ்வூர்க்கு அழகு தருகிறது,

ஊருக்கு வடமேற்கேயுள்ள கம்பனிக் கண்மாய்க்கு மணி முத்தாறு நீர்த்தேக்கத் திலிருந்து தண்ணீர் கொண்டு வரப்படுகிறது.

ஊருக்கு வடமேற்கேயுள்ளகம்பனிக்கண்மாயும் ஊருக்குமேற்கிலுள்ள பார்ப்பான் கண்மாயும் தெற்கில் ஏந்தல் கண்மாயும் பெரிய கண்மாய்களாகும். மேலும் ஈழேந்தல், கண்மாய் அனியாகுறிச்சிக்கண்மாய்,பூரணத்தான் கண்மாய், உடைப்பனேந்தல் கண்மாய், புதுக்கண்மாய் போன்ற கண்மாய்கள் நாற்புறமும் ஊரைச்சூழ்ந்திருக்கின்றன.

இக்கண்மாய்களின் நீர்வளத்தால் இயற்கையாகவே 33 ஏக்கர் பரப்பளவுள்ள கம்பனூர் 1377 ஏக்கர் 12 செண்ட் நன்செய்நிலத்தைச் செழிப்படையச்செய்து பசிப்பிணி அகற்றுகிறது. 1219 ஏக்கர் 11 செண்ட் புறம்போக்கு நிலங்களும் சீர்திருத்தம் செய்யப்பட்டுத் தமிழக அரசினரால் நிலமற்ற ஏழைவிவசாயிகளுக்கு உரிமையாக்கப்படுகிறது.

## வீரவிளையாட்டு

கம்பனூர்க் கிராமத்தின் மிக அருகில் உள்ள ஊர் சிராவயல் என்ற ஊராகும். கம்பனூர்க்கு வடதிசையில் இரண்டு கல் தொலைவில் உள்ளது. தமிழகத்தில் கொண்டா

டப்பெறும் ஏறுதழுவுதல் என்ற வீரவிளையாட்டு இவ்வூரில் அதிவிமரிசையாக நடத்தப்படுகிறது,

ஆண்டு தோறும் மாட்டுப்பொங்கல் கழித்த மறு நாள் ஏறுதழுவுதல் நடைபெறுகிறது. ஆண்டாண்டு தோறும் தைத்திங்கள் மூன்றும் நாள் சிராவயலில் ஏறுதழுவுதல் நடைவெறும். என்று உறுதிசெய்யப்பட்டுப்பன்னெடுங்கால மாக நடைபெற்று வருகிற விளையாட்டாகும். இவ்வீர விளையாட்டில் விரும்பம் கொண்டவர்கள், நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து கைப் பொருளைச் செல வழித்துக் கொண்டு தம் காளைகளைக்கொண்டு வருவார்கள், தமிழகத்தின் தனிப்பெரும் சொத்துக்களில் ஏறுதழுவுதல் ஒன்ருகும்.

வெள்ளையர்கள் ஆண்ட காலத்தில் இந்த ஏறுதழுவுதல் பற்றி ஒரு சுவையான நிகழ்ச்சி நடத்திருப்பதை இங்கு எழுதாமல் இருக்க முடியாது.

பல்லாண்டுகளுக்கு முன் இராமநாதபுர மாவட்டத்தின் ஆட்சித் தலைவராக ஆங்கிலேயக் கலெக்டர் துரை ஒருவர் இருந்தார், அவர் இந்த வீர விளையாட்டைக் காண விரும்பித்தம் குழுவினருடன் சிராவயல் வந்து தங்கியிருந்தார்.

அவ்வூர் மக்கள் துரைக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுத்து ஏறுதழுவலைக் காணச் செய்தார்கள்

கூற்றம் போலும் கொடுமையுடன் சீற்றங்கொண்டு காற்றிலும் கடிய வேகத்தில் பாய்ந்து வரும் காளைகளின்

விளையாட்டு வெள்ளைத்துரையின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. கூரிய கொம்புகளுடன் நேரியபார்வையில் நின்று விளையாடும் காளைகளையும் காளைகளை அடக்கக்கச்சை கட்டி நிற்கும் இளைஞர்களையும் கண்டு வியந்தார் வெள்ளைத் துரை.

அனுலும் சில காளைகள் தன் கூரிய கொம்புகளால் தன்னைப்பிடிக்க முயலும் மனிதர்களைக் குத்திக் குற்றுயிரா கச் செய்தன. குடல் சரியக்குருதி கொட்டக் குற்றுயி ராகக் கிடக்கும் மனிதர்களைப் பார்த்த துரையின் உள்ளத்தில் அருவெறுப்பு ஏற்பட்டது. வியப்பாக இருந்த ஏறு தழுவுதல் அவருக்குக் கசப்பாக மாறிற்று, மஞ்சுவிரட்டையேவெறுத்து இனிமேல் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் இந்த விளை யாட்டையாருமே நடத்தக் கூடாது என்று கட்டளை பிறப் பித்தார்.

கலெக்டர் துரையின் கண்டிப்பான உத்தரவு கேட்டு இவ்வூர் மக்கள் வேதனைப் பட்டார்கள். கலெக்டர் துரையின் மனமாற்றத்திற்குரிய காரணத்தை உணர்ந்த அவ்வூர் மக் கள், அவரை அணுகிப்பக்குவமாக எடுத்துச் சொன்னுர்கள்.

தொன்று தொட்டு நடந்து வரும் இந்த வீரவிளை யாட்டு எங்கள் குருதியில் கலந்த ஒன்ருகும். நாங்கள் உயி ருக்குப் பயந்தவர்களல்ல. காளையை அடக்க முயலும் போதே உயிரைப்பணயம் வைத்துததான் ஈடுபடுகிருேம். எனவே நாங்கள் மீண்டும் மஞ்சுவிரட்டு நடத்தக்கலெக்டர் துரையவர் கள் கருணை புரிய வேண்டும் என்று இறைஞ்சினுர்கள்.

ஊர் மக்களின் பேச்சும் அவர்கள் வீரத்திற்குத் தருகிற விலைமதிக்க முடியாத பரிசும் அவர் மனதை மாற்றியது.

என்ருலும் வெள்ளைத்துரை ஒரு விதி விலக்களித்து இத்த வீரவிளையாட்டை நடத்துங்கள். என்று மறு ஆணை பிறப்பித்தார். இனிமேல் நடத்தப்படும் ஏறுதழுவலில்வரும் காளை மாடுகளுக்குக் கொம்புகளே இருக்கக்கூடாது. காளைகளுக்குக்கொம்பில்லா மல்மீண்டும் மஞ்சுவிரட்டு நடத்தலாம் என்று கண்டிப்பான கட்டளை பிறப்பிக்கப்பட்டது,

அடுத்த ஆண்டுமுழுக்கம்போல் மஞ்சு விரட்டு முந்தைய ஆண்டுகளைவிடமிகச் சிறப்பாக நடைபெற்றது. மாடுகளும். மக்களும் நிரம்பி வழிந்தார்கள். கலெக்டர் துரையும் அந்நிகழ்ச்சியைக் கண்டுகளிக்கவும், கண்காணிக்கவும் வந்திருத்தார்.

மாடுகள் தொழுவினின்று அவிழ்த்து விடப்பட்டன. நான்குகால் பாய்ச்சலில் பாய்ந்து செல்லும் மாடுகளும், நின்று விடுயாடும் காளைகளும், தந்திரத்தால் தப்பிச் செல் ஏறுகளும் பார்ப்போருக்கு அச்சத்தை விளைவித்தன. ஆனல் ஓடுகின்ற மாடுகள் அத்தனையும் இழைக்கப்பட்ட கூரிய கொம்புகளுடன் கூற்றம் போல் சென்றுகொண்டிருந்தன பலரையும் குத்திப்படுகாயப்படுத்திச் செனறன.

இக்காட்சிவெள்ளைத்துரையின் க்ண்களில் பட்டது. உள்ளம் படபடக்க உதடுகள் துடிக்கக்கண்கள் சிவக்க மிதந்த சினத்துடன் தன் கட்டளையை மீறியதற்குக் கடுமையான தண்டனை விதிக்க எண்ணினர்.

ஊர் மக்களை அழைத்து என் ஆணையை மீறிவிட் டீர்கள். கொம்புகளுடன் மாட்டை விரட்டிப்பல உயிர்கள் மடியக்காரணமாகிவிட்டீர்கள். அதற்குரிய தண்டனையை நீங்கள் பெற்றே தீர வேண்டும் என்று சீற்றங்கொண்டார்,

அப்பொழுது ஊர் மக்களில் ஒருவர் மிகவும் அமை தியாகவும் அழகாவும் பணிவுடன், கலெக்டர் துரை அவர் களே! தங்களின் ஆணையை நாங்கள் ஒரு பொழுதும் மீற வில்லை. தங்கள் ஆணைப்படிதான் ஏறுதழுவுதல் நடைபெற் றிருக்கிறது. அதிகாரி அவர்களை மீறும் துணிவு எங்களுக் கில்லை. தாங்கள் கொம்பில்லாமல் மாடுகளை விரட்டச்சொன் னீர்கள். இதோ! அது போலத்தான் கொம்புகள் இல்லாமல் மாடுகளை அவிழ்த்து விரட்டியிருக்கிறோம். வேண்டுமென்றால் நீங்களே பாருங்கள் என்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த கொட்டு, தப்பு, வாங்கா, வைத்திருந்தவர்களைக் காட்டி துரை அவர்களே! இவர்களில் யாராவது கொம்பு வைத்திருக்கிறார் களா? பார்த்தீர்களா? மற்ற கருவிகள் இருக்கின்றன, கொம்புகள் இல்லை. தங்கள் ஆணைப்படி கொம்புகள் இல்லா மல் மாடுகளை விரட்டினோம் என்று கூறி வணங்கினர்,

வெள்ளைத்துரை அப்பொழுதுதான் உண்மையை உணர்ந்தார். நாம் மஞ்சுவிரட்டில் மாடுகளுக்கு கொம்பில் லாமல் விரட்டச்சொன்னோம். ஆனால் இவர்கள் மிகச்சாதுரிய மாகப் பழங்காலத்து ஊது கருவிகளில் ஒன்றான கொம்பினை விலக்கிவிட்டு மாடுகளை விரட்டியிருக்கிறார்கள். மாட்டுக்கொம புக்கும் ஊது கொம்புக்கும் உள்ள ஒன்றுமையும் இந்த நிகழ்ச் சிக்கு அது பொருந்திய விதமும், அதை இவ்வூர் மக்கள் பயன்படுததிய அறிவுக்கூர்மையையும் எண்ணி வியந்தார்.

தமிழக மக்களின் அறிவும் தெளிவும் வீர விளையாட்டு களில் அவர்களுக்கு இருக்கின்ற உறுதிப்பாட்டையும் எண்ணி வியந்தார். உள்ளம் மாறினர். இனி நீங்கள் கொம்புகளுடனே மாடுகளை விரட்டலாம் என்று கட்டளை யை மாற்றிக்கொண்டார். அதிலிருந்து சிரவாயல் என்னும் ஊரில் ஏறுதழுவுதல் மிக விரிவாக அழகாக இன்றளவும் கொண்டாடப்படுகிறது. என்ற செய்தியினை அறிகின்றோம்.



மிளிக்க நடைபெறுகின்றன. உள்ளூர் மக்களும், வெளியூர் மக்களும் இரண்டறக்கலந்து, என்றுமில்லாமல்மகிழ்ச்சியுடன் போய் வந்து கொண்டிருக்கிறார்கள்.

மன்னரின் மனம் போல் நடைபெறும் இக்குடமுழுக்கு விழா. மன்னரின் புகழிற்கு ஒளிசேர்க்கும் வைரமாகத் திகழ்கிறது.

இப்பெருவிழாவை, ஈடும்எடுப்புடன் நடத்திய சிவகங்கை மன்னரின் பீடுயரக், கம்பனூர் மக்கள் ஓரணியாகத்திரண்டு மன்னருக்குப்பாராட்டு விழா நடத்தினார்கள்.

குடமுழுக்கு விழாவிற்கு முதல் நாள் 13-6-72 புதன் கிழமை பிற்பகல் 4 மணி அளவில் மாபெரும் ஊர்வலம் தொடங்கி நடைபெற்றது.

தமிழ் நாடு தொழிலாளர், நலத்துறை அமைச்சர் மாண்புமிகு. என். வி. நடராசன் அவர்கள் விழாவிற்கு தலைமைஏற்றுபோற்றிப் புகழ்ந்தார்கள். சட்டமன்ற, மன்னரைப்நாடாளுமன்ற உறுப்பினர்களும் அறிஞர்பெருமக்களும் திரளாக வந்து பாராட்டுரை வழங்கினார்கள்.

முத்தமிழ் விழாட்போல நடைபெற்ற இந்தக் குடமுழுக்கு விழா, அப்பகுதி மக்களுக்குப் புத்தம் புதிய உணர்வையும், எழுச்சியினையும், ஊட்டியது. காலத்தால் அழியாத இந்நற்பணி, காலத்தைக் கடந்து கதைகள் பல சொல்லும்.

ஆம்! அதோ! ஸ்ரீ. கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தின் மணி ஒலிக்கிறது. அதன் ஒலி கோட்டைப்பிள்ளையார் சேங்கையில் எதிரொலிக்கிறது.

## முடிவுரை

"கம்பனூர் தலவிளக்கநூல்" எழுதும் சிறப்புப்பெற்ற கம்பனூர், இன்று விழாக்கோலம் பூண்டிருக்கிறது. எங்கு பார்த்தாலும் மக்கள் வெள்ளம், அவர்களின் உள்ளும், புறமும் மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள், பார்த்த இடமெல்லாம் வளைவுகளும், வாழைமரங்களும், மாவிலை தோரணங்களும், ஈச்சங்குலைகளும், தென்னங்குலைகளும், வீதிதோறும் கட்டப்பெற்றுக் கண்ணுக்கு இனிமையாகக் காட்சி தருகின்றன. மங்கல ஒலியும், மத்தள ஓசையும் செந்தேனாய்க் காதில் பாய்கின்றன.

ஆம்! இன்றைக்குச்சரியாக இருபதுதிங்கள்களுக்கு முன், தொடங்கப்பெற்ற ஸ்ரீ. கோட்டை விநாயகர் மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தைப்புதுப்பிக்கும் திருப்பணிமுடிந்து பரிதாபி ஆண்டு ஆவணித்திங்கள் 26ஆம் நாள் 14-9-72 வியாழக்கிழமை காலை குடமுழுக்கு விழா சிறப்புடன் நடைபெறுகிறது.

திருக்கோயில் பெருமையுடைய, சிவகங்கை மன்னர் மேதகு. கார்த்திகேயவேங்கடாசலபதி இராஜா அவர்கள் குடமுழுக்கு விழாவினை இந்திரவிழாப்போல எடுத்து நடத்துகிறார்கள்.

எப்பொழுதும் புதுமை செய்யவிரும்பும் சிவகங்கை மன்னரவர்கள் குடமுழுக்கு விழாவினையொட்டிக், கம்பனூர் தலவிளக்கநூல் வெளியீட்டு விழா, பட்டி மன்றம் போன்ற இலக்கிய விழாக்களும், இன்னிசை, நாடகம், பலகுரல் நிகழ்ச்சி கிராமீயக்கலைகள் போன்ற கலைநிகழ்ச்சிகளும் உள்ள

இந்த ஒலிக்கெல்லாம் ஒலியாகி ஒளியாகி சுற்றுமதி லுடன் கூடிய கோட்டையில் கோட்டைவிநாயகர் புதிய பொலிவுடன் காட்சியளிக்கிருர்,

"மூர்த்தியாகி தலமாகி முந்நீர்கங்கை முதலான தீர்த்தமாகி அறிந்தறியாத் திறத்திலும் உயிர்க்குநாம் ஆர்த்திநாலும் அறியாமையகற்றி அறிவிப்பா னெவன் அப் போர்த்த கணபதியைப் புகழ்ந்துசரண மடைகின்ருேம்"

வணக்கம்



## 20 சிவகங்கைச்சீமையை ஆண்ட கௌரி வல்லப அரசபரம்பரை

| எண் | காலம் | அரசர் அல்லது அரசி பெயர் |
|---|---|---|
| 1 | 1730—1750 | கௌரிவல்லப சசிவர்ண ராஜா |
| 2 | 1750—1790 | கௌரிவல்லப முத்துவடுகனுத ராஜா I |
| 3 | 1790—1801 | ராணி வேலு நாச்சியார் I |
| 4 | | ராணி வேலு நாச்சியார் II |
| 5 | 1801—1129 | கௌரிவல்லப உடையண ராஜா I |
| 6 | 1830—1831 | கௌரிவல்லப முத்துவடுகனுத ராஜா II |
| 7 | 1831—1841 | கௌரிவல்லப போதகுருசுவாமி ராஜா I |
| 8 | 1841 1848 | கௌரிவல்லப உடையண ராஜா II |
| 9 | 1848—1863 | கௌரிவல்லப போதகுருசாமி ராஜா II |
| 10 | 1864—1877 | ராணி காதம நாச்சியார் |
| 11 | 7 மாதங்கள் (1877) | கௌரிவல்லப முத்துவடுகனுத ராஜா III |
| 12 | 1878—1883 | கௌரிவல்லப துரைசிங்க ராஜா I |
| 13 | 1883—1898 | கௌரிவல்லபஉடையணராஜா III |
| 14 | 1898—1941 | கௌரிவல்லப துரைசிங்க ராஜா II |
| 15 | 1941—1963 | கௌரி வல்லப சண்முக ராஜா |
| 16 | 1963— | கௌரிவல்லப கார்த்திகேய வெங்கடாசலபதி ராஜா |

# 21. சிவகங்கை சமஸ்தானம்
## தேவஸ்தானச் சேர்ந்த திருவாலயங்கள்

| எண் | தெய்வத்திருப்பெயர் | ஊர் |
|---|---|---|
| 1 | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி | கோவானூர் |
| 2 | ஸ்ரீ கண்ணுடையநாயகியம்மன் | நாட்டரசன் கோட்டை |
| 3 | ஸ்ரீ கரிகாற் சோளீசுவரர் | ,, |
| 4 | ஸ்ரீ வெங்கடஜலபதி பெருமாள் | ,, |
| 5 | ஸ்ரீ புல்வநாயகியம்மன் | பாகனேரி |
| 6 | ஸ்ரீ பெரியநாயகியம்மன் | பனங்காடி |
| 7 | ஸ்ரீ சசிவர்ணேசுவரர் | சிவகங்கை |
| 8 | ஸ்ரீ அருள் மொழிநாதசுவாமி | சோழபுரம் |
| 9 | ஸ்ரீ மருதப்ப அய்யனார் | வாணியங்குடி |
| 10 | ஸ்ரீ விசுவநாத சுவாமி | சிவகங்கை |
| 11 | ஸ்ரீ மனகோலியம்மன் | அம்மஞ்சிப்பட்டி |
| 12 | ஸ்ரீ சோளீசுவரர் | அரளிக்கோட்டை |
| 3 | ஸ்ரீ மருந்தீசுவரர் & பிரியா விடை நாயனார் | ஏரியூர் வடவன்பட்டி |
| 14 | ஸ்ரீ திருக்கண்ணன்குடி நாயனார் | கதப்பட்டு |

| எண் | தெய்வத்திருப்பெயர்கள் | ஊர் |
|---|---|---|
| 15 | ஸ்ரீ கண்டீசுவர சுவாமி | செம்பனூர் |
| 16 | ,, திருமலைநாத சுவாமி | திருமலை |
| 17 | ,, அழகிய சவுந்தரியம்மன் | பட்டமங்களம் |
| 18 | ,, சௌமிய நாராயணப் பெருமாள் | திருக்கோட்டியூர் |
| 19 | ,, திருமெய்ஞவைரவநாத சுவாமி | வைரவன்பட்டி |
| 20 | ,, அழகிய முனீசுவர சுவாமி | அழகாபுரி |
| 21 | ,, இளங்கமுடைய அய்யனார் | காளாப்பூர் |
| 22 | ,, கோட்டைப்பிள்ளையார் | கம்பனூர் |
| 23 | ,, கைலாசநாத சுவாமி & அழகிய கண்ட விநாயகர் | கண்டரமாணிக்கம் |
| 24 | ,, கைலாசநாத சுவாமி | கரிசப்பட்டு |
| 25 | ,, காட்டு நாச்சியம்மன் | சிருவயல் |
| 26 | ,, மீனாட்சி சொக்கநாதர் | முறையூர் |
| 27 | ,, செவிட்டு அய்யனார் | சூரக்குடி |
| 28 | ,, திருமேனிநாத சுவாமி | ஒழுகுமங்களம் |
| 29 | ,, அண்டப்பிள்ளை அய்யனார் | பெரிச்சிக் கோயில் |
| 30 | ,, சேவுகப்பெருமாள் ,, | சிங்கம்புணரி |

| எண் | தெய்வத்திருப்பெயர்கள் | ஊர் |
|---|---|---|
| 31 | ஸ்ரீ சுயம்பிரதீசுவரர் | சிவபுரி |
| 32 | ,, மனமொத்த கண்டீசுவரர் | நெற்குப்பை |
| 33 | ,, பெரிய மருந்தீசுவரர் | நெற்குப்பை |
| 34 | ,, சேவுகப்பெருமாள் அய்யனர் | பெரிய மருதர்பட்டி |
| 35 | ,, ஆண்டார் சுவாமி | தென்கரை |
| 36 | ,, வள்ளிநாயக சுவாமி | தூவர் |
| 37 | ,, உருத்ரபதிநாயனர் | வேலங்குடி |
| 38 | ,, கைலாசநாத சுவாமி | வெளியாத்தூர் |
| 39 | ,, வந்தருளீசுவர சுவாமி | அமராவதி புதூர் |
| 40 | ,, கருவேளுடைய அய்யனர் | அண்டக்குடி |
| 41 | ,, பாகச்சால விநாயகர் | கல்லல் |
| 42 | ,, திருப்பாக அகஸ்தீசுவரர் | கல்லங்குடி |
| 43 | ,, சிவலோகநாத சுவாமி | கானாடுகாத்தான் |
| 44 | ,, விசுவநாத சுவாமி | எலுவன்கோட்டை |
| 45 | ,, கொற்றவாளீசுவரசுவாமி | கழனிவாசல் |
| 46 | ,, சிறகிழி நாத சுவாமி | கண்டதேவி |

| எண் | தெய்வத்திருப்பெயர் | ஊர் |
|---|---|---|
| 47 | ஸ்ரீ மார்க்கண்டேஸ்சுவரர் சுவாமி | கீழப்பூங்குடி |
| 48 | ” நாகநாத சுவாமி | கோட்டவயல் |
| 49 | ” வால்மீக நாதசுவாமி | நெம்மேனி |
| 50 | ” புலிக்குட்டி அம்மன் | புலிக்குட்டி |
| 51 | ” திருமேனி நாத சுவாமி | கொத்தமங்கலம் |
| 52 | ” வீரசேகர சுவாமி | சாக்கோட்டை |
| 53 | ” சன்னவன நாத சுவாமி | சன்னவனம் |
| 54 | ” மும் முடி நாத சுவாமி | அரண்மணை சிறுவயல் |
| 55 | ” நாகநாத சுவாமி | திருதண்கூர் |
| 56 | ” தெய்வகாளி அம்மன் | உஞ்சனை |
| 57 | ” திரிபுவன சக்கரவர்த்தீஸ்வர சுவாமி | ” |
| 58 | ” சொக்கநாத சுவாமி | வி.சூரக்குடி |
| 59 | ” கண் நிறைந்த பெருமாள் | ” |
| 60 | ” திருமேனி நாதசுவாமி | ஆனந்தூர் |
| 61 | ” தில்லை நாயகசு வாமி | ராதானூர் |
| 62 | ” ஏகாம்பர நாத சுவாமி | திருவேகம்பத்து |

| எண் | தெய்வத்திருப்பெயர்கள் | ஊர் |
|---|---|---|
| 63 | ஸ்ரீ திருவாலிஸ்வர சுவாமி | சாத்தனூர் |
| 64 | ” வால்மீக நாத சுவாமி | திருவெற்றியூர் |
| 65 | ” காளீஸ்வரர் | காளையார்கோவில் |
| | ” சோமேஸ்வரர் | ” |
| | ” சொக்கநாத சுவாமி | ” |
| 66 | ” மூர்த்தி நாயனர் | மாராத்தூர் |
| 67 | ” பெரியநாயகி அம்மன் | உருவாட்டி |
| 68 | ” அகஸ்தீஸ்வர சுவாமி | கற்குடி |
| 69 | ” ராஜேந்திர சோழீஸ்வரர் | இளையாங்குடி |
| 70 | ” மதனவேணு கோபால பெருமாள் | இளையாங்குடி |
| 71 | ” கருமேனி அம்மன் | அரண்மனைக்கரை |
| 72 | ” நாகநாத சுவாமி | நாகமுகுந்தன்குடி |
| 73 | ” சொர்ணவாரீஸ்வரர் | நெட்டூர் |
| 74 | ” வண்ண மஉரமுடைய அய்யனர் | புதுக்கோட்டை |
| 75 | ” சந்திரசேகர சுவாமி | சேத்தூர் |
| 76 | ” திருக்கண்ணேஸ்வர சுவாமி | விசயன்குடி |

| எண் | தெய்வத்திருப்பெயர்கள் | ஊர் |
|---|---|---|
| 77 | ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி | மாணூர் |
| 78 | " அப்பன் பெருமாள் | மானுமதுரை |
| 79 | " விருபகாசி நாத சுவாமி | நரிக்குடி |
| 80 | " அழகிய மணவாளப் பெருமாள் | பார்த்திபனூர் |
| 81 | " சோமநாத சுவாமி | மானுமதுரை |
| 82 | " வீரழகர் | " |
| 83 | " புஷ்பவனேஸ்வரர் | திருப்புவனம் |
| 84 | " திருநோக்கிய அழகிய நாதர் | திருப்பாச்சேத்தி |
| 85 | " நன்மை தருவார் | மதுரை |

## 22. சிவகங்கை சமஸ்தானம் கட்டளைகள்

| எண் | கட்டளை | கோயில் பெயர்கள் | ஊர் |
|---|---|---|---|
| 1 | உச்சிக்கால கட்டளை | ஸ்ரீ கனகசபாபதி ஆலயம் | சிதம்பரம் |
| 2 | பிரதோஷக் கட்டளை | ஸ்ரீ தியாகராச சுவாமி ஆலயம் | திருவாரூர் |
| 3 | கமலாருட்சனைக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சியம்மன் ஆலயம் | மதுரை |
| 4 | உச்சிக்கால கட்டளை | ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் கோயில் | அழகர் கோவில் |
| 5 | கல்லுமடைக் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயம் | திருப்பரங்குன்றம் |
| 6 | பீக்குளம் கட்டளை | ஸ்ரீ மீனுட்சியம்மன் கோயில் | மதுரை |
| 7 | அர்த்தசாமக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சியம்மன் கோயில் | மதுரை |
| 8 | கால சந்திக் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி ஆலயம் | திருப்பரங்குன்றம் |
| 9 | திருவாச்சிக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சியம்மன் கோவில் | மதுரை |
| 10 | விசாகம் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் | திருப்பரங்குன்றம் |
| 11 | அதிகரைக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம் | மதுரை |
| 12 | உச்சிக்காலக்கட்டளை | ஸ்ரீ தண்டாயுதபாணி சுவாமி ஆலயம் | பழனி |
| 13 | காலசந்திக் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் | திருப்பரங்குன்றம் |
| 14 | விழாபூசைக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சி கோவில் | மதுரை |
| 15 | அன்னுபிஷேகக்கட்டளை | ஸ்ரீ மீனுட்சி கோவில் | மதுரை |
| 16 | துவாதேசிக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சி கோவில் | மதுரை |

| எண் | கட்டளை | கோயில் பெயர்கள் | ஊர் |
|---|---|---|---|
| 17 | உச்சிகாலக் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் | திருப்பரங்குன்றம் |
| 18 | விழாபூசைக் கட்டளை | ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோவில் | திருச்செந்தூர் |
| 19 | உடத்தூர் கட்டளை | ஸ்ரீ திருவாப்புடையார் கோவில் | மதுரை |
| 20 | காலச்சந்திக் கட்டளை | ஸ்ரீ மீனுட்சி கோவில் | மதுரை |
| 21 | திருமஞ்சனக் கட்டளை | ஸ்ரீ தெய்வச்சிலை பெருமாள் கோவில் | திருப்புல்லணை |
| 22 | விழாபூசைக் கட்டளை | ஸ்ரீ நாகநாத சுவாமி ஆலயம் | நயினுர் கோவில் |

# 23 சிவகங்கை சமஸ்தானச் சத்திரங்கள்

| எண் | சத்திரப்பெயர் | ஊர் | வட்டம் |
|---|---|---|---|
| 1 | வடக்குச் சத்திரம் | சிவகங்கை | சிவகங்கை |
| 2 | தெற்குச் சத்திரம் | ,, | ,, |
| 3 | கங்கை மடம் | ,, | ,, |
| 4 | சந்தன மடம் | ,, | ,, |
| 5 | திருவேகம்பத்து சத்திரம் | திருவேகம்பத்து | திருவாடானை |
| 6 | சுந்தரபாண்டியன் பட்டணம் சத்திரம் | சுந்தரபாண்டியன் பட்டணம் | ,, |
| 7 | கலியநகரிச் சத்திரம் | கலியநகரி | ,, |
| 8 | உருத்திக்கோட்டை மடம் | உருத்திக்கோட்டை | ,, |
| 9 | மானாமதுரைச் சத்திரம் | மானாமதுரை | மானாமதுரை |



| எண் | சத்திரம்பெயர் | ஊர் | வட்டம் |
|---|---|---|---|
| 10 | முத்தனேந்தல் சத்திரம் | முத்தனேந்தல் | மானுமதுரை |
| 11 | மாரையூர் சத்திரம் | மரையூர் | ,, |
| 12 | வைரவன்செட்டிச் சத்திரம் | பார்த்திபனூர் | பரமக்குடி |
| 13 | சூடியூர் சத்திர்ம் | சூடியூர் | ,, |
| 14 | அண்ணுமலைச் செட்டி சத்திரம் | பார்த்திபனூர் | ,, |
| 15 | நாகப்ப செட்டிச் சத்திரம் | பரமக்குடி | ,, |
| 16 | ஆனந்தபுரம் சத்திரம் | ஆலகங்குளம் | இராமனுதபுரம் |
| 17 | உடையனுதபுரம் சத்திரம் | தங்கச்சி மடம் | ,, |
| 18 | சங்கிலி சேர்வை மடம் | தங்கச்சிமடம் | ,, |
| 19 | வயல்சேரி மாங்குளச் சத்திரம் | திருப்புவனம் | திருப்புவனம் |
| 20 | திருப்புவனம் கோட்டை | திருப்புவனம் | |